கடவுள்துணை.

# சேந்தன் திவாகரம்.

## மூலபாடம்.

இஃது

சென்னைக்கல்விச்சங்கத்துத்

தமிழ்த்தலைமைப்புலமைநடாத்திய

**தாண்டவராயமுதலியார் அவர்களால்**

பதிப்பித்த

**பத்துத்தொகுதிகளின் மூலத்தோடு**

*ஷை சங்கத்து வித்துவான்களாற் பதிப்பித்த*

**மற்ற விரண்டுதொகுதிகளின் மூலத்தையும்**

ஒன்றாகச்சேர்த்து,




திருப்போரூர்,

**டி. கோபால்நாயகர் அவர்களது**

சென்னை:

**கோள்டன் எலெக்ட்ரிக் பிரஸ்ஸில்**

பதிப்பிக்கப்பெற்றது.

இதன் விலை] **1923.** [ரூபா 1¼

உ

கணபதி துணை.

# சேந்தன் திவாகரம்.

## முதலாவது தெய்வப்பெயர்த்தொகுதி.

### மூலபாடம்.

காப்பு.

*தந்திமுகத் தெந்தை சதங்கைப் பதம்போற்றிச்*
*சிந்தை விளக்காந் திவாகரத்துள்—வந்த*
*தொகுதியொரு பன்னிரண்டுஞ் சாரமனேரே*
*பகுதியுற மனமே பற்று.*

சிவன்பெயர்:— சங்கரனிறையோன் - காமதகனன், கங்காதரனே-கறைமிடற்றண்ணல், கூற்றையுதைத்தோன்-குன்றவில்லி, ஏற்றுவாகனன்-திரியம்பகன்சோதி, நக்கன்சடையோன், நாரிபாகன், முக்கட்பகவன்-பசுபதிபரமன், கொன்றைசூடி - கொலைமழுவாளி, ஈமத்தாடி—பிஞ்சகன்பித்தன், ஆனையுரித்தோன் - அரன்சிவனுருத்திரன், காலகாலன் - கபாலமூர்த்தி, நீலகண்டன் - நீறணிகடவுள், அரவாபரணன்-ஆரழலாடி, பிறையதுசூடி-பெருமானுமாபதி, அழலதுவேந்தி-அமலனநந்தன், பரசுபாணி-சுடலையாடி, மானிடமேந்தி-மறைமுதல்யோகி, புலித்தோலுடையோன்-புரமூன்றெரித்தோன், பினாகபாணி-பேயோடாடி, பூதநாதன் - புணர்கங்காளன், ஞானமூர்த்தி - ஈசனாதி, ஐம்முகன்பகவன் - ஆதிபாண்டரங்கன், அந்திவண்ணன் - ஆலமர்கடவுள், நந்திநயப்பன்-நாதன்றற்பரன், கண்ணுதன்மூர்த்தி கைலையாளியென், றெண்ணியநாமம் - இன்னமும்பலவே. ஆ-கூச.

திருமால்பெயர்: -மாயோன்மாதவன் - நாரணன்கேசவன், சீதரன்றிருமகன் - பூமிகொழுநன், விண்டுவிறலரி - திரிவிக்கிரமன், உந்திபூத்தோன் - உவணமுயர்த்தோன், வாமனன்கண்ணன் - கோவிந்தனச்சுதன், ஆழ்கடற்றுயின்றோன் - அரவணைச்செல்வன், சக்கராயுதனே - சங்கமேந்தி, கருங்கடல்வண்ணன் - கமலக்கண்ணன், சாரங்கபாணி - தகுபஞ்சாயுதன், உலகமுண்டோன் - உலகினையளந்தோன்,

நரசிங்கன் - ஆதிவராகன், பதுமநாபன் - மதுசூதனனொடு, தாமோ தரனே - தருபீதாம்பரன், காவற்கடவுள்—முராரிமுகுந்தன், பெருமான்பிரமன் - தந்தையென்றிவைமுதல், திருமாற்கனந்தம் - சிறந்த தொல்பெயரே. ஆ. ௩௮.

பிரமன்பெயர்:—உந்தியிலுதித்தோன் - ஒளிமலர் மிசையோன் அன்னவூர்தி - அன்னமுயர்த்தோன், நான்முகன்மான்மகன் -நலங்கெழுகண்ணன், வானவர்முதல்வன் - மண்பொறத்தந்தை, இறைவன் குரவன் - மறையோன்விரிஞ்சன், அந்தணன்ஞானன் - அயன்வரன் றிசைமுகன், பிதாமகன்விதாதா - கமலயோனி, வேதாப்போதன் - விதிபரமேட்டி, இரணியகருப்பன்—படைப்போனிவைமுதல், அரணியல் பிரமற் - கனந்தம்பெயரே. ஆ. ௨௭.

இந்திரன்பெயர்:— புரந்தரன்புனிதன் - பொன்னகர்க்கிறைவன், வாசவனமரர்கோன் - மான்முகிலூர்தி, வேள்விநாயகன் - விண்முழுதாளி, ஆயிரங்கண்ணன்—அயிராணிகேள்வன், மருத்துவன்மகவான் - வலாரிவிருத்திராரி, வெள்ளைவாரணன் - இமையவர்வேந்தன், பாகசாதனன் - அகண்டலனே, வச்சிரபாணி - சதக்கிருதென்றிவை, எச்சமிலிந்திரற் - கியன்றதொல்பெயரே. ஆ. ௨௧.

கணபதியின்பெயர்:— ஒற்றைக்கொம்பன் - விநாயகனைங்கரன் வெற்றியானை - முகவன்கணபதி, பாசாங்குசதரன் - ஆகுவா ஆ. ௯.

முருகன்பெயர்:—முருகன்சூர்ப்பகை—செட்டிகுமரன், உ, காதலன் - சேவலங்கொடியோன், கார்த்திகேயன் - கடம்பன்க வேலுடைக்கடவுள் - வேலவர்க்கிறைவன், வரைபகவெறிந்தோ வள்ளிமணாளன், அரன்மகன்குறிஞ்சிமன் - சரவணத்துதித்தோ அறுமுகனவிசாகன் - குகன்சேய்செவ்வேள், தேவர்சேனாபதி - ம லாளிச்சேந்தன், கந்தன்காங்கேயன் -வேளெனச்செப்புவர். ஆ. ௨௯

காமன்பெயர்:— வேனிலாளி - வேண்மதனனங்கன், மாரன்பூவாளி - மன்மதன்கந்தர்ப்பன், பஞ்சபாணன் - கருப்புவில்லி, இரதிகாதலன்-மகரமுயர்த்தோன், திருமால்புதல்வன்-வசந்தனென்றிவை, வருமால்காமற் - கியன்றவன்பெயரே. ஆ. ௧௪.

வைரவன்பெயர்:—வைரவன்காரி - வடுகக்கடவுள். ஆ. ௨.

ஐயனார்பெயர்:— கோழிக்கொடியோன் -சாதவாகனன், காரிசாத்தன் - கடனிறவையன். ஆ. ௪.

வச்சிரவண்ணன்பெயர்:— மந்திரிகுபேரன் - நிதிக்கோனியக்கன், பிங்கலனாற்கும் - பிரியாத்தோழன், வடதிசைத்தலைவன் — இயக்கர்வேந்தன், அளகையாளி - ஆயமுற்காவலன், புட்பகவூர்தி - தனதன்மாசுகதனென்ன, வைப்பர்நாமம் - வச்சிரவணற்கே. ஆ. ௧௩.

அருகன்பெயர்:— அநகனசலன் — அதிகுணனபயன், அமையவனறிவன் - அதிசயனமலன், பூரணன்புங்கவன் - புணர்முக்குடையோன், அசோகுடைச்செல்வன் - அண்ணறத்தலைவன், ஆதியங்கடவுள் - அறவாழியந்தணன், அரியணைச்செல்வன் - அருளாழிவேந்தன், பண்ணவன்பகவன் - எண்குணன்மாசேனனன், விண்ணவனிறைவன் - விறலோன்விளங்கொளி, பொன்னெயிலுறைதன் - பூமிசைநடந்தோன், முனைவன்வீரன் - முதல்வன்புனிதன், காமற்காய்ந்தோன் - கமலவூர்தி, சினேந்திரன்திகம்பான் - சாந்தன்புண்ணியன், மூர்த்தியாசான், முழுதொருங்குணர்ந்தோன், வாதன் சினன்வான் - என்றிவைமுதலா, அருகற்கினும் — அனந்தம்பெயரே. ஆ. ௪௩.

புத்தன்பெயர்:— அண்ணல்வாமன் - அருங்கலைநாயகன், புண்ணியமுதல்வன் - ஆதிபுங்கவன், பாரின்மிசையோன் - சாந்தன்புனிதன், பகவன்சைனன் - அறவன்மூர்த்தி, போதிவேந்தன் - சினன்வான்புத்தன், ஏகதேவன் - முக்குற்றங்கடிந்தோன், அருணெறிசுரக்கும் - செல்வனனந்த, லோசனன்வளர்ந்த - பூமிசைநடந்தோன், அகளங்கன்முத்தன் - புண்ணியமூர்த்தி, பஞ்சதாரைவிட்டவுணர்கூட்டிய, எஞ்சலில் பெருமாற் - கின்னவும்பலவே. ஆ. ௨௫.

நமன்பெயர்:— அந்தகன்தருமன் - தென்றிசைமுதல்வன், சண்டன்மறலி - கூற்றுச்சமன்ஞமன், செங்கோற்கடவுள் - இயமனென்றிவை, தங்கியநமன்மேற் - றரும்பெயராகும். ஆ. ௧௦.

காலன்பெயர்:— சண்டனுமறலியும் - கூற்றுச்சமனுமென், றிந்தவகைப்பேர் - காலற்குமாகும். ஆ. ௪.

உமையவள்பெயர்:— காமக்கோட்டி - அம்பிகைகௌரி, ஆரியைசத்தி - அபிராணிபார்வதி, இமயவல்லி - உமையவள்பேரே, ஆ. ௮.

கங்கையின்பெயர்:— பகீரதிசானவி - வாநதிசுரநதி, திரிபதகைமந்தா - கினிபிரவகங்கை. ஆ. ௬.

காடுகாள்பெயர்:— காடுகாண்மோடி - காரிதாய்கொற்றி, மாடிசூடி - வடுகிமூதணங்கே. ஆ. ௫.

திருமகள்பெயர்:— பொறிமாவாக்கம் - செல்விபொன்பூமகள், செய்யாளிந்திரை - திருமகள்பெயரே, கமலைபதுமை - விமலைகோகனகை, அனையவுமவள் பெயர் - ஆகுமென்ப. ஆூ-கஉ.

சரஸ்வதியின்பெயர்:—பாரதிவாணி - பனுவலாட்டி, வெண்டாமரையாள் - வெள்ளைமேனியாள், நான்முகன்கிழத்தி - நாமகள்கலைமகள், உலகமாதா - ஊர்பூரவாகனி, ஞானமூர்த்தி - நற்பாமடந்தைசாவித்திரியே - காயத்திரியென, வாக்கிசெய்யிலை - நோக்கியபெயரே. ஆூ-கச.

சேட்டையின்பெயர்:— முகடிதௌவை - கலதிமூதேவி, காக்கைக்கொடியாள் - கழுதைவாகனி, கேட்டைகெடலணங்கு - சேட்டைப்பெயரே. ஆூ-அ.

இந்திராணியின்பெயர்:—சுந்தரிசசியே - அயிராணிபுலோமிசை இந்திரன்றேவிக் - கெய்தும்பெயரே. ஆூ-ச.

காளியின்பெயர்:—சூலியெண்டோளி - தாருகவிநாசனி, மாதரிவீரி - கௌரிமுக்கண்ணி, பைரவிகுமாரி - சாமுண்டிசண்டிகை, யோகினிவேதாளி - யாமளைமாகாளி. ஆூ-கச.

பகவதியின்பெயர்:—கொற்றவையையை - கார்த்திகைகௌரி, துர்க்கைசூலி - மகிடற்காய்ந்தாள், நீலியெண்டோளி - விந்தைசயமகள், இருங்கலையூர்தி - எழிலரியேறி, மேதித்தலைமிசை - விசயையந்தரி, மாலுக்கிளையாள் - சக்காயுதியே, பாலைக்கிழத்தி-பண்ணம்பணத்தி, நாராயணியே - கன்னிகுமரி, சீர்சால்பகவதி சிறந்தநொல்பெயரே. ஆூ-உஉ.

இடாகினியின்பெயர்:—வஞ்சனிமாயவள் - வலவையிடாகினி, ஆூ-ரு.

யோகினியின்பெயர்:—சன்மினிசூர்மகள்-யோகினியாகும். ஆூ-உ.

அமரர்மாதர்பெயர்:—அரம்பையராமகளிற்-அமரர்மாதர். ஆூ-உ.

தெய்வப்பெண்பொதுப்பெயர்: அணங்குஞ்சூரும்-தெய்வப்பெண்பொதுப்பெயர். ஆூ-உ.

தேவர்கள்பொதுப்பெயர்:—வானவரிமையவர் - விண்ணவர்கடவுளர், அமரர்சுரர்புலவர் — அண்டர்புத்தேளிர், ஐயரும்பர் - தேவர்கள் பொதுப்பெயர், பண்ணவர்பகவர் - தீர்த்தர்பட்டாரகர், புங்கவரென வும் - கடவுளர்பொதுப்பெயர். ஆூ-கஅ.

அசுரர்பெயர்:—தானவரவுணர் - தகுவர்தைத்தியரென், றினைய நான்கும் — நிராசரருமசுரர். ஆூ-ரு.

மாவலியின்பெயர்:—வைரோசனனே-மாவலியவுணன். ஆ-உ.

இராக்கதர்பெயர்:—அரக்கரிராக்கதர் - நிசாசரர் நிருதரென், றுரைத்தநான்கும் - ஒன்றன்பால, சாலகடங்கடரும் — பிசிதாசன ரும், யாதுதானவரும் - அவ்வினத்தவரே. ஆ-அ.

வித்தியாதரர்பெயர்:—விஞ்சையர்கேசரர் - வித்தியாதரர்பெயர். ஆ-உ.

கந்திருவர்பெயர்:—தந்திரர்கின்னரர் - வீணைவல்லவர், கந்திருவர் பெயரெனக்-கருதல்வேண்டும். ஆ-ச.

பூதகணத்தின்பெயர்.—சாதசங்கிருத்திமம் - குறள்கூளிபாரிடம், பூதகணமெனப் - புகன்றனர்புலவர். ஆ-ச.

பேயின்பெயர்:—கழுதுசோகு - கடிகணமண்ணை, அலகைகூளி - பிசாசுவேதாளம், பிரேதகஞ்சாவோ-டிணங்குருணபாசியென். றினை யவீராறும்-பேயெனல்வேண்டும். ஆ-கஉ.

ஆகாயத்தின்பெயர்:—அந்தரமாசினி - அம்பரமங்குல், அண்டம் வானம் — ககனமீவெளி, விண்ணுநாகமாகும் - விசும்புதலையும்பர், இடங் குடியென்றுங்-கிவைபதினேழும், அடங்கலிலாகா - யப்பெயராகும். ஆ-கஎ.

காற்றின்பெயர்:—வாதங்கூதிர் - வங்கூழ்காலவளி, ஊதையனி லம்-கோதைநீழல், உலவைமாருதம் - மருத்துப்புவனம், வாடையொ லியே - கூதையுயிர்ப்பே, வெற்றலங்கொண்டல் - கோடையென்றிரு பதும், காற்றின்பெயரெனக்-கருதல்வேண்டும். ஆ-உ௦.

பனிக்காற்றின்பெயர்:—கூதிருமூதையும் — குளிர்பனிக்காற்றே. ஆ-உ.

வடகாற்றின்பெயர்:—வாடைவடந்தை-வடகாற்றாகும். ஆ-உ

மேல்காற்றின்பெயர்:—கோடைமேல்காற்று. ஆ-க.

கீழ்காற்றின்பெயர்.—கொண்டல்கீழ்காற்று. ஆ-க.

தென்றலின்பெயர்.—மந்தாநிலமே - மலயக்காலே, தென்கால் வசந்தன் - தென்றலென்றிசைப்பர். ஆ-ச.

சுழல்காற்றின்பெயர்:—சூறைசாரிகை-சுழன்றெழுகாற்றே. ஆ-உ.

நெருப்பின்பெயர்:—அழலங்காரகன் — அங்கிகனலி, எரிதழறப னன் - பாவகன்றீயனல், செஞ்சுடர்ப்பகவன் - ஒருகிழியுதாசனன், உதவகன்தனஞ்சயன் — வசுவெழுநாவரி, தென்கீழ்த்திசையோன்— வன்னிதேயுவென், றின்னவைபிறவும்—நெருப்பின்பெயரே. ஆ-உக.

வடவாமுகாக்கினியின்பெயர்:—உத்தரமடங்கல்-ஊழித்தீயென, வைத்தகடையனல் — வடவாமுகமே. ஆ-ச.

விளக்கின்பெயர்:—தீபமுஞ்சுடரும்-விளக்கெனச்செப்புவர். ஆ-உ.

அனற்பொறியின்பெயர்:—புலிங்கமனற்பொறி. ஆ-க.

அனற்றிரளின்பெயர்:உற்கமனற்றிரள். ஆ-க.

காட்டேரியின்பெயர்:—தாவங்காட்டேரி. ஆ-க.

தீக்கடைகோலின்பெயர்:—அரணிஞெலிகோல் - தீக்கடைகோலே. ஆ-உ.

தீக்கடவுளின்பெயர்:—பாவகனத்தீக் - கடவுள்பெயரே. ஆ-உ.

நீரின்பெயர்:—அறலும்புனலும்-அப்பும்பாணியும், உதகமுங்கமலமும் — அமுதமுங்கவந்தமும், பயமுஞ்சலிலமும் - அயமுமளகமும், புவனமும்வனமும் - கோவுங்கீலாலமும், காண்டமுந்தோயமும் - நாரமுநீரே. ஆ-கச.

வெள்ளநீரின்பெயர்:—சீத்தம்பிரளயம்-வாரிவெள்ளநீர். ஆ-உ.

புனற்கரசன்பெயர்:—மற்றப்புனற்கரசன்-வருணனாகும். ஆ-உ.

அருக்கன்பெயர்:—வெய்யோனிருள்வலி — பதங்கன் சூரியன். சுடரவன்றரணி - உதயனாதவன், எல்லைமார்த்தாண்டன் - தினகரன் பனிப்பகை, பரிதிசெங்கதிர் - அலரிபானு, வெஞ்சுடர்க் கிரணன் - பகலவன்வேந்தன், ஆயிரங்கதிரோன் - அழலவன்றிவாகரன், இரவி பாற்கரன் - என்றாழருணன், ஆதித்தன்கனலி - ஞாயிறுவிரிச்சிகன், சான்றோனரியே - தபனனென்றினையவும், ஆன்றவருக்கற் - கனந்தம் பெயரே. ஆ-கரு.

சந்திரன்பெயர்:—அம்புலிதிங்கள் -குபேரனருச்சிகன், நிசாகரனி மகரன் — ஆலோன்கலங்கன், தண்சுடர்க்கலையோன் -இராக்கதிர்தானவன், வியோமதத்துடுபதி - அமுதகிரணன், இந்துசோமன் - பிறைமதி சசிவிதுவென, வந்தனபிறவும் - நிலவுஞ்சந்திரன். ஆ-உ௦.

செவ்வாயின்பெயர்:—அங்காரகன்குசன் — ஆரல்வக்கிரன், மங்கலனறிவன் - செந்தீவண்ணன், பூமகனிலமகன் - குருதிசேய் செவ்வாய், நாமமென்று - நவின்றனர்புலவர். ஆ-கக.

புதன்பெயர்:—அருணன்றூதுவன் -அனுவழிமேதை, மதிமகன் பாகன் - மாலவன்கணக்கன், புந்திபுலவன் - பண்டிதன் சௌமியன், சிந்தைகூரியோன் - அறிவன்புதனென, வந்தநாமம் -மற்றவற்காகும். ஆ-கச.

வியாழத்தின்பெயர்: —மந்திரியாசான் - பீதகன்சுரகுரு, அந்தணனரசன்-ஆண்டளப்பான் பிரகற்பதி, சுந்தரப்பொன்குரு-மஞ்ஞயோன் வியாழம். ஆ-கக.

சுக்கிரன்பெயர்.- பளிங்குபார்க்கவன் - புகர்புயன் மழைக்கோள், விளங்குதிங்கள் - பிரசுரன்சல்லியன், ஒள்ளியோன்சுங்கன் - அசுரமந்திரியென, வெள்ளிசிதன்பிருகு - சுக்கிரன்பெயரே. ஆ-கச.

சனியின்பெயர்: மந்தன்காரி-கரியோன்முடவன், அந்தனீலன்-கதிர்மகன்கீழ்மகன், பங்குமேற்கோள்-சௌரிமுதுமகன், சந்தில்சாவகன் — சனியின்பெயரே. ஆ-கக.

இராகுவின்பெயர்: இராகுக்கோள்கரும்பாம்பு. ஆ-க.

கேதுவின்பெயர்: -கேதுக்கோள்செம்பாம்பு. ஆ-க.

அனந்தன்பெயர்:- —அனந்தன்பெயரே-சேடனுகும். ஆ-உ.

மேடவிராசியின்பெயர்: வருடை புருடைசர்-மறிமைகொறியென, விரியுமாட்டின்பெயர் - மேடவிராசி. ஆ-ச.

இடபவிராசியின்பெயர்: பாறல்புல்லம் - பாண்டில்பசுப்புரி, ஏறு முதல்வந்தன - இடபவிராசி. ஆ-ச.

மிதுனத்தின்பெயர்: பாடவையாடவை-இரட்டை சயமகள். மேவுமியாழ்ப்பல்பெயர் - நண்டே மிதுனம். ஆ-ச.

கர்க்கடகத்தின்பெயர்: - அலவனள்ளி - குளிர்ஞெண்டார் மதி, கள்வனென்றிவை - கர்க்கடகப்பெயரே. ஆ-ச.

சிங்கத்தின்பெயர்: அரிமாபுலியை - அன்னம்பாளி, தெரியிற் புலியெப் - பல்பெயர்சிங்கம். ஆ-ரு.

கன்னியின்பெயர்: பெண்மைப்பெயரே-கன்னிக்குமாகும். ஆ-உ.

துலாத்தின்பெயர்: - நிறையேகட்டளைவாணிகனிறப்பான், துலையேகோலெனத - துலாப்பெயர்பெறுமே. ஆ-ரு.

விருற்சிகத்தின்பெயர்: —நெருக்கால்பறப்பன் — தேளேவிருச்சிகம், நலமென பெயருமே - தேளினமேற்றே. ஆ-ங.

தனுவின்பெயர்: —சாபங்காண் பதந்துவின் பெயரே. ஆ-உ.

மகரத்தின்பெயர்: மானேகலைசுறு - மகரப்பெயரே. ஆ-உ.

கும்பத்தின்பெயர்:—குடமேசாடி - பெயரேகும்பம். ஆ-உ.

மீனத்தின்பெயர்:—மீனமீனின் - பலபெயர்பெறுமே. ஆ-உ.

அச்சுவினியின்பெயர்: - இரலையைப்பிரியாழ்-வறுதலையினுள், புரவிமருத்துவநாள் - அச்சுவினியென்ப. ஆ-ச.

பரணிநாளின்பெயர்:—காடுகிழவோன்-பூதமடுப்பே, தாழிபெறு ஞ்சோறு-தருமனுள்போதமென, பாகுபட்டது - பரணிநாட்பெயரே. ஆடூ-அ.

கார்த்திகையின்பெயர்:—அங்கியாரல்-அளக்காளகிருல், பொங் கியநாடன்-நாவிதன்வாணன், தங்கொளியறுமீன்-தழனுள்கார்த்திகை. ஆடூ-சு.

உரோகிணியின்பெயர்:—பண்டிபார்சகடு - சாகாடுவையம், ஒண் டிறலுருடோர் - அயனுளுரோகிணி. ஆடூ-ச.

மிருகசீரிடத்தின்பெயர்:—மாழ்கு போராளன்—மான்றலையிந்திரன் மார்கழிநரிப்புறம்-மதிநாண்மூம்மீன், பாலைவெய்யோன்-மிருகசீரிடட் பெயர். ஆடூ-ஈ.

திருவாதிரையின்பெயர்:—மூதிரை செங்கையாழ்-ஈசர்தினமென ஆதிரைதன்பெயர்-ஆகுமென்ப. ஆடூ-ச.

புனர்பூசத்தின்பெயர்:—அதிதிநாள்மூங்கில்-கரும்பாவணம்பாலை புனிதம்பிண்டி-புநர்தம்புனர்பூசம். ஆடூ-அ.

பூசநாளின்பெயர்:—கொடிறுகாற்குளம் - சுரர்குருநாள் வண்டு புணர்வதாகும் - பூசநாட்பெயரே. ஆடூ-ச.

ஆயிலியத்தின்பெயர்:—அரவினுள்கௌவை - ஆயிலியப் பெயர் ஆடூ-உ.

மகத்தின்பெயர்:—வேட்டுவன்கொடுநுகம்-மெழுவாயெழுஞ்சனி வாய்க்கால்பிதிர்நாள்-மாசிமகமாகும். ஆடூ-ச.

பூரத்தின்பெயர்:—இடையதெழுஞ்சனி — எலியேதூர்க்கை, ப வதிநாணுவிதன் - கணையேபூரம். ஆடூ-ச.

உத்தரத்தின்பெயர்:—பங்குனிகடைய - தெழுஞ்சனிபாற்குநி, ம னேறுகதிர்நாள்-உத்திரமாகும். ஆடூ-ரு.

அத்தத்தின்பெயர்:—கைம்மீன்காமரம் - களிறுகௌத்துவம். ந விகன்னி - ஐவிரலத்தம். ஆடூ-ச.

சித்திரைநாளின்பெயர்:—நெய்வான்மீன்சுவை - பயற்றொுடுநே வான், செவ்விதிற்றுவட்டாநாள்-சித்திரையென்ப. ஆடூ-சு.

சோதிநாளின்பெயர்:—விளக்கே வீழ்க்கை - வெறுநுகமரக்கால் துளக்கமிலகிலநாள் - சோதிநாளாகும். ஆடூ-ரு.

விசாகநாளின்பெயர்:—முறமேமுற்றில் - வைகாசியணில நாள் பெறுமேசுளகு-விசாகநாட்பெயரே. ஆடூ-ரு.

அநுடத்தின்பெயர்:— பனைகேள்பெண்ணை - புற்றுளிபோந்தை, முத்திரநாளிவை-அனுடப்பெயரே. ஆ-எ.

கேட்டையின்பெயர்:—துளங்கொளிவல்லாரை—வேதியெரிதழல், கிளந்தவிந்திரநாள்-பின்றூக்கேட்டை. ஆ—ரு.

மூலத்தின்பெயர்:—கொக்கேதேட்கடை-குருகுவில்லன்றில்,முற்றுமானி—அசுரநாண்மூலம். ஆ-எ.

பூராடத்தின்பெயர்:—உடைகுளமுற்குளம் — நீர்நாள் பூராடம். ஆ—ங.

உத்தராடநாளின்பெயர்:—ஆடியானி - கடைக்குளம்விச்சுவநாள், நாடிலுத்திராட—நாளாகும்மே. ஆ-ச.

திருவோணத்தின்பெயர்:—நலத்தகுவயிரம்-நள்ளேசிரவணம் உலக்கைசோனை - மாயோனோணம். ஆ-சு.

அவிட்டத்தின்பெயர்:—ஆவணிகாக்கை-பறவைபுள்வசுநாள், மேவியவிட்ட - மீனின்பெயரே. ஆ-ரு.

சதயநாளின்பெயர்:—குன்றுபோரே - சுண்டன்பெருஞ் செக்கு, தங்குவருணனுள் - சதயநாளாகும். ஆ-ரு.

பூரட்டாதியின்பெயர்:—புரட்டாதிமுற்கொழுங் - கோல் பூரட்டாதி, உரைப்பர்நாழியும் - அந்நாளுடனே. ஆ-ங.

உத்திரட்டாதியின்பெயர்:—முரசுபிற்கொழுங்கோன்— மன்னனிம்மூன்றினோ, டுரைசெயபறிவனுள்-உத்திரட்டாதி. ஆ-ச.

இரேவதியின்பெயர்:—தொழுவேநாவாய் - தோணிசூலம், பஞ்சறி புருடநாள் - கடைமீனிரேவதி. ஆ-எ.

அருந்ததியின்பெயர்:—அருந்ததிசாலி - வடமீனுகும். ஆ-உ.

வான்மீனின்பெயர்:—உடுதாரகணம்-ஒளிவான்மீனே. ஆ-உ

காலநுட்பத்தின்பெயர்:— நொடியுங்கலையும் - தொடர்காலநுட்பம். ஆ—உ.

நாழிகையின்பெயர்:—கன்னலுமிருத்தையும்-கடிகையும் பதமும், சொன்னவிகலையும் - நாழிகைத்தொல்பெயர். ஆ-ரு.

பொழுதின்பெயர்:—வேலையுமமையமும்-காலையும்பதமும், எல்லையுங்காலமும் - பொழுதெனப்படுமே. ஆ-சு.

முன்னைநாளின்பெயர்:—நென்னலு நெருநலும் - முன்னைநாளாகும். ஆ-உ.

பின்னைநாளின்பெயர்:—பிற்றையும்பின்றையும்-பின்னைநாளாகும். ஆடூ-௨.

உச்சியின்பெயர்:—நண்பகலுச்சி. ஆடூ-௧.

நந்தியின்பெயர்:—அந்திசந்தி. ஆடூ-௧.

சாமத்தின்பெயர்:—யாமஞ்சாமம். ஆடூ-௧.

பகலின்பெயர்:—எல்லைபகலாம். ஆடூ-௧.

வெயிலின்பெயர்:-என்றூழாதபம்-வெயிலெனப்படுமே. ஆடூ-௨.

சந்திரிகையின்பெயர்:- நிலவுசந்திரிகை-ஆகுமென்ப. ஆடூ-௧.

இரவின்பெயர்:—அல்லியுங்கங்குலும் - யாமமுமாலையும், அல்லு மங்குலும் - இரசனியுமல்கலும், யாமினியுநிசியும் - எல்லுமிரவே. ஆடூ-௧௧.

இருளின்பெயர்:- நிசியேநத்தம்-நீலமதனொடு,திமிரமுந்தமமும்-இருளாகும்மே ஆடூ-௫.

நாளின்பெயர்:—பகலும்வைகலும்-திவசமுந்தினமும், ஆளியமுந் திவாவும்—நாளாகும்மே. ஆடூ-௯.

அருணோதயத்தின்பெயர்: —வைகறைவிடியல் - புலரியருணோதயம். ஆடூ-௫.

திதியின்பெயர்: —திதிபோபக்கம். ஆடூ-௧.

மாதத்தின்பெயர்:—மதியேதிங்கள்-மாதமாகும். ஆடூ-௨.

முதற்பக்கத்தின்பெயர்: - பக்கமுதலது—நந்தையாகும். ஆடூ-௧.

இரண்டாம்பக்கத்தின்பெயர்: —பத்திரையென்ப-இரண்டாம் பக்கம். ஆடூ-௧.

மூன்றும்பக்கத்தின்பெயர்: -மூன்றேசயைபக்கம். ஆடூ—௧.

நான்காம்பக்கத்தின்பெயர்:—நான்கேயிரித்தை. ஆடூ-௧.

ஐந்தாம்பக்கத்தின்பெயர்:-ஐந்தாம்பக்கம்-பூரணையாகும். ஆடூ-௧.

பாதிநாளின்பெயர்:—அரைநாளும்பாளும்-அத்தநாளும் பாதி நாள். ஆடூ-௫.

மாத்திரைநாளின்பெயர்:—கணமேமாத்திரை. ஆடூ-௧.

நிகழ்காலத்தின்பெயர்:—வேலையென்பது-நிகழுங்காலம். ஆடூ-௧.

வெப்பத்தின்பெயர்:—உருப்பம்வெப்பம்-ஆகுமென்ப. ஆடூ—௧

கோடையின்பெயர்:—வேனில்கோடை-மிசைப்போகும். ஆடூ-௧.

சிறுபொழுதின்பெயர்:—ஓல்லைசிறுவரை-சிறுபொழுதாகும். ஆகூ-உ.

அறுவகைப்பருவமாவன:—காரேகூதிர் —முன்பனிபின்பனி, சிரி ளவேனில் - முதுவேனிலென்றாங், கிருமூன்றுவகைய - பருவமவ்வை தாம், ஆவணிமுதலா — இரண்டிரண்டாக, மேவினதிங்கள் - எண்ணி னர்கொளலே. ஆகூ-௬.

பனியின்பெயர்:—இமமுந்துகினமும்- மஞ்ஞநீகாரமும், பனியின் பெயரென - பகரப்படுமே. ஆகூ-௪.

கார்காலத்தின்பெயர்:—காரெனுங்காலப்-பெயர்சரற்காலம். ஆகூ-க.

கூதிர்காலத்துக்கும், பனிக்காலத்துக்கும்பெயர்:—கூதிர்காலமும். குளிர்பனிக்காலமும், ஆகுமென்ப-சிசிரநாளே. ஆகூ-க.

பருவத்தின்பெயர்:—ஆனியமுமிருதுவும்-பருவமாகும். ஆகூ-உ.

காலமாவன:—பருவமும்யாண்டும்-காலமாகும். ஆகூ-உ.

யுகத்தின்பெயர்:—ஊழியுமுறைபுளும்-உகமாகும்மே. ஆகூ-உ.

யுகமுடிவின்பெயர்:—ஊழியுமடங்கலும்-உகமுடிவாகும். ஆகூ-உ.

நான்முகன்வாழ்நாளின்பெயர்:—நான்முகன்வாழ்நாள் - கற்பமா கும். ஆகூ-க.

வாழ்நாளின்பெயர்:—ஆயுளாயுகம்-வாழ்நாளென்ப. ஆகூ-உ.

மேலின்பெயர்:—மேற்குவலமீ-உம்பர்மேலாகும். ஆகூ-உ.

கீழின்பெயர்:—கிழக்குக்கீழே. ஆகூ-க.

வருடத்தின்பெயர்:—துவலைபெயலை - துளியேமாரி, உறைபெய லாலி-உதகஞ்சிதரி, தூவல்சீகரம் - தூறல்வருடம். ஆகூ-கஉ.

மேகத்தின்பெயர்:—மேகஞ்சீதம்-விசும்புவான்விண்முகில், கொ ண்மூமஞ்சு—கொண்டன்மைம்மழை, எழிலிகார்குயின்-கந்தரம் விண்டு, மங்குன்மால்செல்-கனமும்வரையார். ஆகூ-கக.

இடியேற்றின்பெயர்:—உருமுஞ்செல்லும்- அசனியுமுருமேறும், இடியும்வானேறும்-இடியேற்றின்பெயரே. ஆகூ-௬.

மழைபெய்துவிடுதலின்பெயர்: — தலையெலென்பது — மழைபெய்து விடுதல். ஆகூ-க.

விடாதுசோரிதலின்பெயர்:—சோனையும் பனித்தலும் - விடாது சொரிதல். ஆகூ-உ.

பெருமழையின்பெயர்:—ஆசாரமென்பது-பெருமழையாகும். ஆகூ-க.

துளியின்பெயர்:—துளிபெயலாலி-உறைதுளியாகும். ஆகூ-௪.

ஆலங்கட்டியின்பெயர்:—ஆலியாலம்-கட்டியாகும். ஆ௱-௧.

துவலையின்பெயர்:—சீகரம்பிதிரே - சிதரசிசிகரம், தூவலென்றி வை-துவலையாகும். ஆ௱-௬.

மின்னின்பெயர்:—தடித்துத்தடிமின். ஆ௱-௧.

இடியின்பெயர்:—இடிப்பெயரிருளே. ஆ௱-௧.

பரிவேடத்தின்பெயர்:—ஊர்கோள்வட்டம் - பரிவேடப்பெயரே. ஆ௱-௨.

இந்திரவில்லின்பெயர்:—வானவில்லிந்திர - வில்லென வறைவர். ஆ௱-௨.

காமன்காண்டீபத்தின்பெயர்:—காமன்காண்டீபம்-கருப்புவில்லாகும். ஆ௱-௨.

திவாகரவரலாறு.

வடநூற் கரசன் றென்றமிழ்க் கவிஞன்
கவியரங் கேற்று முபயகவிப் புலவன்
செறிகுணத் தம்பற் கிழவோன் சேந்தன்
அறிவு கரியாகத் தெரிசொற் றிவாகரத்துள்.

முதலாவது.

## தெய்வப்பெயர்த்தொகுதி.

முற்றிற்று.



கடவுள் துணை.

# இரண்டாவது மக்கட்பெயர்த்தொகுதி.

## மூலபாடம்

அருந்தவர்பெயர்:—துறவோரையர்-மாதவர்முனிவர், அறவோர் நீத்தோர்-அறிஞருயர்ந்தோர், தாபதர்மெய்யர்-தவத்தர் தபோதனர், மூனிவரிருடிகள்-படிவர்பண்ணவர், யோகிகள்கடிந்தோர் - பெரியோ ருறுவனென், ருகியவந்தணர்-அருந்தவர் பெயரே. ஆ-உக.

சைதவதப்பாலோர்பெயர்:—மாவிரதியரும் - காளாமுகரும்,பாசு பதரும்-சைவதவப்பாலோர். ஆ-௩.

நாராயணசமயத்தோர்பெயர்:—நாராயணசமயத்தோர் - பாகவத ரே. ஆ-க.

சமணர்பெயர்:—சாவகருகர்-சமணராகும், ஆசீவகரும்-அத்தவ த்தோரே. ஆ-௩.

புத்தர்பெயர்:—புத்தர்சாக்கியர்-தேரர்பௌத்தர், வைத்தசீவக ரும்-அத்தவத்தோரே. ஆ-௪.

சமணமுனிவர்பெயர்:—சாரணர்சமண-முனிவராகும். ஆ-க.

சடைமுடியோர்பெயர்:—தாபதர்-சடைமுடியோர். ஆ-க.

பார்ப்பார்பெயர்:—ஐயர்வேதியர்-இருபிறப்பாளர், மெய்யர்மிக்க வர் - மறையோர்பூசுரர், அந்தணர்நூலோர்-அறுதொழிலாளர், செந் தீவளர்ப்போர் - உயர்ந்தோராய்ந்தோர், ஆதிவருணர்— வேதபாரகர், விப்பிரர்தொழுகுலத்-தோர்வேள்வியாளர், முப்புரிநூலோர் முனிவ ரென்றிவை - தப்பில்பார்ப்பார், தம்பெயராகும். ஆ-உ௦.

நூலுரைப்போர்பெயர்:—கணக்காயர்-நூலுரைப்போர். ஆ-க.

கலைவல்லோர்பெயர்:—கவிஞர்கலைவல்லோர். ஆ-க.

அறிவுடையோர்பெயர்:—சான்றோர்மிக்கோர் - நல்லவர்மேலவர், ஆய்ந்தோருயர்ந்தோர்- ஆரியருலகென, வாய்ந்தவான்றோர் - அறிவு டையோரே. ஆ-௧௰.

புலவர்பெயர்:—கவிஞர்கலைஞர்—கற்றவர்மேதையர், சவையேசங் கம்-முதுவோர்மூத்தோர், அவையயறிஞர்-புதரேபுலவர். ஆ-௬.

மிகவல்லோர்பெயர்:—விபுதர்நிபுணர்-குசலர்மிகவல்லோர். ஆ-௨.

மூத்தோன்பெயர்:—அடிகளத்தன்-ஐயனாசான், குரவன்சாமி-கோமான்பெருமான், உரவோனீசன்-இறைவன்றலைவன், விறவுப்திநாதன்-மூத்தோன்பெயரே. ஆக-௮.

பெருமையிற்சிறந்தோன்பெயர்:—அண்ணலுங்குரிசிலும்—ஏந்தலுந்தோன்றலும், செம்மலும்பெருமையிற்-சிறந்தோன்பெயரே. ஆக-௫.

எப்பொருட்குமிறைவன்பெயர்:—நாதனாயகன்- அதிபன்காந்தன், பதிகோனீசன்-செம்மலிறையே, தலைவன்மன்னவன்-பிரானே கொழுநன், அரசனாதி - எனப்பதினைந்தும், உரைசெயெப் பொருட்கும் - இறைவன்மேற்றே. ஆக-௧௫.

உயர்ந்தோர்பெயர்:—உலகமென்ப-துயர்ந்தோர்மாட்டே. ஆக-௧.

திரண்டோர்பெயர்—சங்கமுங்குழுவுங்- கூட்டமுங்கணமும், தங்கியதொகுதியும்- சவையுமவையும், இங்கிவைதிரண்டோர் - யாவர்க்குமுரிய. ஆக-௭.

அரசன்பெயர்:—புரவலன்கொற்றவன்-பெருமான்காவலன், அரையனேந்தல்-கோவேகுரிசில், தலைவன்மன்னவன்-வேந்தன் முதல்வன், நிருபன்பூபாலன்-நரபதிபார்த்திவன், இறைவனண்ணல்-எனப்பதினெட்டும், அரசன்றொல்பெயர்-ஆகுமென்ப. ஆக-௧௮.

குருகுலத்தரசர்பெயர்:—பாரதர்கௌரவர்-குருகுலத்தரசர். ஆக-௨.

கோச்சேரன்பெயர்:—பூழியனுதியன்-கொங்கன்பொறையன், வானவன்குட்டுவன்-வானவரம்பன், வில்லவன்குடநாடன்-வஞ்சிவேந்தன், கொல்லிச்சிலம்பன்-கோதைகேரளன், போந்தின்கண்ணிக்கோன்-பொருனைத்துறைவன், சேரலன்மலயமான்-கோச்சேரன்பெயரே. ஆக-௧௭.

கோச்சோழன்பெயர்:—சென்னிவளவன்-கிள்ளிசெம்பியன், பொன்னித்துறைவன் - புலிக்கொடிப்புரவலன், நேரியனார்த்தார்க்கோன் - நேரிறையபயன், நேரிவெற்பன்-கோழிவேந்தன், சூரியன்புனனாடன்-கோச்சோழன்பெயரே. ஆக-௧௪.

கோப்பாண்டியன்பெயர்:—செழியன்றமிழ்நாடன்-கூடற்கோ தென்னவன், வழுதிமீனவன்—பஞ்சவன்மாறன், கௌரியன்வேம்பின்-கண்ணிக்கோகைதவன், பொதியப்பொருப்பன்-புனல்வையைத்துறைவன், குமரிச்சேர்ப்பன்-கோப்பாண்டியனே. ஆக-௧௪.

சளுக்குவேந்தர்பெயர்:—வேள்புலவரசர்-சளுக்குவேந்தர். ஆக-௧.

குறுநிலவேந்தர்பெயர்:—வேளிரும்புரோசரும்— குறுநிலவேந்தர், அரட்டருங்குறும்பரும்-ஆகுமென்ப. ஆக—௪.

மந்திரிக்கிழவர்பெயர்:—முதுவர்குரவர் - மூத்தோர் முன்னோர், உழையோர் சூழ்வோர்-நூல்வல்லோரே, அமைச்சர்தேர்ச்சித்-துணைவ ரென்றாங், கிசைத்தமந்திரிக்-கிழவர்க்கெய்தும். ஆ-௬.

நட்பாளர்பெயர்:—இனப்பெயர்தன்னட்-பாளர்க்கெய்தும். ஆ-க.

மந்திரித்தந்திரிக்குப்பெயர்:—ஏனாதிகர்விதியர்- ஆமாத்தியரெனும் பெயர், ஆனமந்திரித்-தந்திரிக்கெய்தும். ஆ-௩.

கருமத்தலைவர்பெயர்:—வள்ளுவன்சாக்கை-எனும்பெயர்மன்னர்க் குள்படுகருமத்-தலைவர்க்கொன்றும். ஆ-௨.

போர்த்தலைவர்பெயர்:—பொருநர் போர்த்தலைவர்-பொருநரென்ன ப்படும். ஆ-க.

பரிவாரத்தின்பெயர்:—பரியாளமென்பது-பரிவாரமாகும். ஆ-க.

கசட்டிகள்பெயர்:—இப்பர்பரதர்-வைசியர்கவிப்பர்,எட்டியரிளங் கோக்கள்- ஏர்த்தொழிலர்பசுக்காவலர், ஒப்பினாயகர் - வினைஞர்வணிக ரென், றத்தகுசிலேட்டிகள்-செட்டிகள்பெயரே. ஆ-கஉ.

காராளர்பெயர்:—வினைஞர்சூத்திரர்-பின்னவர்சதுத்தர், வளமை யர்வேளாலர்-மண்மகள்புதல்வர், வார்த்தைத்தொழிலோர்-வண்களமரு ழவர், சீர்த்தவேளரின்-வாழ்நர்காராளர். ஆ-கக.

கைக்கோளர்பெயர்:—செங்குந்தப்படையர்-சேனைத்தலையர், தந் துவாயர்-காருகர்கைக்கோளர். ஆ-௭.

மருத்துவர்பெயர்:—ஆயுள்வேதியர்-மாமருத்துவநூலோர், மாமா த்திரரே-பிடகர்மருத்துவர். ஆ-௪.

குயவர்பெயர்:—கும்பகாரர்-குலாலர்வேட்கோவரென், றிங்கிவை குயவர்-மட்பகைஞரென்ப. ஆ-௪.

உப்பமைப்போர்பெயர்:—உமணரளவர்-உப்பமைப்போரே. ஆ-௨

சித்திரக்காரர்பெயர்:—ஓவியர்சித்திரக்-காரராகும். ஆ-௨.

கம்மாளர்பெயர்:—கம்மியர்யவனர்-கொல்லர்தபதியர், அக்கசாலை யர்-சிப்பியரதனொடு, வித்தகர்வித்தியர்-புனைவரறிவரென், றத்தகுகம் மாளர்-பெயரெனவறைவர். ஆ-க௦.

தச்சர்பெயர்:—தபதியர்மரவினையர்-தச்சராகும். ஆ-௨.

கன்னார்பெயர்:—கன்னுவர்கஞ்சக்-காரர்கன்னார். ஆ-௨.

தட்டார்பெயர்:—செங்கொல்லர்தட்டார்- பொன்வினைசெய்வோர். ஆ-௨.

வண்ணார்பெயர்:—ஏகாலியர் தூசர்-ஈரங்கோலியர், காழியர்வண்ணார்-ஆகக்கருதுவர். ஆ-௪.

உறைகாரர்பெயர்:—காரோடருறைகாரர். ஆ-க.

ஊன்விலைஞர்பெயர்:—சூனரூன் வினைஞர். ஆ-க.

தோல்வினைஞர்பெயர்:—பறம்பர்தோல்வினைஞர். ஆ-க.

நாவிதர்பெயர்:—பெருமஞ்சிகரே-மயிர்வினைஞர்நாவிதர். ஆ-௨.

செக்கார்பெயர்:—சக்கிரிநந்திகள்-செக்காராகும். ஆ-௨.

கள்விலைஞர்பெயர்:—பழையர் துவசர்-படுவர்கள்விலைஞர். ஆ-௩.

மிலேச்சர்பெயர்:—மிலேச்சராரியர். ஆ-க.

சோனகர்பெயர்:—யவனர்சோனகர். ஆ-க.

சண்டாளர்பெயர்:—குணுங்கர்வங்கர் – கவுண்டர்கனகதர், இழிஞர்கொலைஞர் – புலைஞரென்றுங், கிசையும்பெயர்சண் – டாளர்க்கெய்தும். ஆ-எ.

பாணர்பெயர்:—சென்னியர்வைரியர் - சூதர்மாகதர், இன்னிசைகாரர்-மதங்கர்பாணர். ஆ-௬.

பாடற்கீழ்மக்கள்பெயர்:—பண்டருமோ வரும் - பாடற் கீழ்மக்கள். ஆ-௨.

தமிழ்க்கூத்தர்பெயர்:—வாசிலோர் தமிழ்க்கூத்தர். ஆ-க.

கழைக்கூத்தர்பெயர்:—வேழம்பர் கழைக்கூத்தர். ஆ-க.

தோற்கருவியிசைப்போர்பெயர்:—இயவர்தோற்கருவி- இசைக்குமாக்கள். ஆ-க.

நரப்புக்கருவிகொளற்குரியோர்பெயர்:— குயிலுவர்நரப்புக்-கருவிகொளற்குரியோர். ஆ-க.

தொழில்செய்வோர்பெயர்:—தொழுவர்க்கம்மியர்-தொழில் செய்வோரே. ஆ-௨.

புதியோர்பெயர்:—அதிதியர்வம்பலர்-புதியோராகும். ஆ-௨.

மீகாமன்பெயர்:—நீகான்மரக்கலன்—மீகாமனாகும்.

அயலோர்பெயர்:—நொதுமலர்வம்பலர்—அயலோராகும். ஆ-௨.

வழிச்செல்வோர்பெயர்:—பதிகரென்ப - வழிச்சொல் வோரே. ஆ-க.

அடிமையின்பெயர்:—ஆளுந்தொழும்பும் - அடிமை யாகும். ஆ-௨.

மடையர்பெயர்:—வாலுவர்கூவியர்-மடையராகும். ஆ-உ.

ஏவல்செய்வோர்பெயர்:—சிலதர்சிலதியர்-சேடர்சேடியர்,பரிசன முறையோர்-ஏவல்செயற்பாலோர். ஆ-சு.

தூதர்பெயர்:—வினையுரைப் பாரும் - வழியுரைப்பாரும், அனைய புண்புரைப்-பாருந்தூதர். ஆ-ரு.

ஒற்றர்பெயர்:—சாரணருசாவே-ஒற்றெனச்சாற்றுவர் ஆ-உ.

வெறியாட்டாளன்பெயர்:—வேலன்முருகன்-வெறியாட்டாளன், தேவாரளன்-படிமத்தோனே. ஆ-ச.

செவிடர்பெயர்:—செவிடர்வதியர். ஆ-க.

முடவன்பெயர்:—முடவன்பங்கு, ஆ-க.

அலியின்பெயர்:—பேடர்பேடியர்-பெண்டகர்பெண்டரென், றாகிய நான்கும்-அலிப்பெயராகும். ஆ.ச.

ஊமையின்பெயர்:—மூகையுமூங்கையும்-ஊமையாகும். ஆ-உ.

குருடர்பெயர்:—ஆதாந்தர்-அந்தகர்குருடர். ஆ-ரு.

கூனின்பெயர்:—கூனேகோணல்-ஆமெனக்கூறுவர். ஆ-க.

குறளின்பெயர்:—சிந்தே துஞ்சம்—குறளேவாமனம். ஆ-ரு.

கீழ்மக்கள்பெயர்:—கயவர்கனிட்டர்-பூரியர்நீசயர், சுமடர்பேதை யர்-தீயோர்மூடர், புல்லர்தோரர் - கலர்பொறியற்றார், சித்தையர்சிறு மையர்-கையர்கண்டகர், மூக்கர்திம்பர் - மூகர்முசுண்டரென், றாக்கிய பெயர்கீழ்-மக்கட்காகும். ஆ-உ0.

அறிவிலான்பெயர்:—முழுமகன்சிதடன்-இழுதைமூடன், மண்ணை மடன்பேதை - குதலையுஞ்ஞை, அஞரேயாதன் - ஏழையறிவிலான் ஆ-கஉ.

தரித்திரர்பெயர்:—ஆதுலர்வறியோர்-இல்லோரெளியர், உறுகணா ளர்-நல்கூர்ந்தோர்தரித்திரர். ஆ-சு.

துயருறுவோர்பெயர்:—ஆர்த்தர்துயருறுவோர். ஆ-க.

திருடர்பெயர்:—காவடர்சோரர் - கள்வர்பட்டிகள், கேனர்புரை யோர்-திருடராகும். ஆ-சு.

உரியோர்பெயர்:—கிழவருரியோர். ஆ-க.

முதுணர்ந்தோர்பெயர்:—முதுவர்முதுணர்ந்தோர். ஆ-க.

வல்லாளன்பெயர்:—வயவன்மீளி-வல்லாளன்னே. ஆ-உ.

திறலோன்பெயர்:—விறலோன்விடலை-திறலோன்பெயரே.ஆ-உ.

நகரப்பதிவாழ்நர்பெயர்:—நகரப் பதிவாழ்நரர் - சதுரர்நாகரீகர் ஆடூ-உ.

தூர்த்தர்பெயர்:—விடரேகாமுகர்—மிகுபோகம் விழையுனர், படிற்றொழுகர்காமத்துப்-பாலோர்தூர்த்தர். ஆடூ-ரு.

கட்டிளமையோன்பெயர்:—குமரன்காளை-மழவன்சேடன், முருகன்கட்டிளமை-யோனெனமொழிப. ஆடூ-ரு.

ஏவுவான்பெயர்:—வியவனேவுவான். ஆடூ-க.

புகழாளன்பெயர்:—இயவுள்புகழாளன். ஆடூ-க.

கரியோன்பெயர்:—கள்வனென்கிளவி-கரியோனென்ப. ஆடூ-க.

கோண்டோற்பிழைத்துப்பெறும் புதல்வன்பெயர்:—கொண்டோற்பிழைத்து-பெறும்புதல்வன்குண்டகன். ஆடூ-க.

கைம்மையிற்பெறும்புதல்வன்பெயர்:—கோளில் கைம்மையிற்-பெறும்புதல்வன்கோளகன். ஆடூ-க.

கன்னியிற்பெறும்புதல்வன்பெயர்:—கன்னியிற்பெறும்புதல்வன்-கானீனனாகும். ஆடூ—க.

குலமுள்ளோர்பெயர்:—குலீனரென்ப-குலமுள்ளோரே. ஆடூ-க.

வல்லோன்பெயர்:—வலவைவல்லுநன் - வல்லோன் பெயரே. ஆடூ—உ.

வல்லுனரல்லோர்பெயர்:—வல்லார் மாட்டாதார் - வல்லுநரல்லோர். ஆடூ—உ.

கூவநூலோர்பெயர்:—உல்லியர்கூவ - நூலுரை புணர்வோர். ஆடூ-க.

கவிகள்பெயர்:—நாவலர்கற்றோர்-பாவலர்கவிகள். ஆடூ-ங.

கடிகைமாக்கள்பெயர்:—மங்கலப் பாடகர் - எட்டர் கடிகைமாக்கள். ஆடூ—உ.

கூத்தர்பெயர்:—கோடியர்பொருநர் — நாடகீய நிருத்தர், கண்ணுளர்வயிரியர்-வினைஞர்நடரென், றெண்ணியபெயர்கள் - கூத்தர்க்கெய்தும். ஆடூ-அ.

புகழ்வோர்பெயர்:—மாகதர்வந்தியர் - சூதர்வேதாளியர், பூகதர்பப்புவர்-புகழ்வோர்பெயரே. ஆடூ-சு.

தேர்ப்பாகர்பெயர்:—சூதரும் வலவரும் - தேர்த்தொழிற் பாகர். ஆடூ-உ.

யானைப்பாகர்பெயர்:—ஆதோரணர்வாதுவர் - யானைப் பாகர். ஆ-௨.

குதிரைவடிப்போர்பெயர்:—வாதுவர்பரிமா - வடிப் போருமா கும். ஆ-க.

இரப்போர்பெயர்:—இரவலரிரவோர்-பரிசிலாளர், யாசகரென்றி வை-இரப்போர்பெயரே. ஆ-௬.

வரையாதுகோடுப்போர்பெயர்:—வரையாது கொடுப்போர். வள் ளியோராகும். ஆ-க.

தானைத்தலைவர்பெயர்:—மானவர்வீரர் - மறவர்பொருநர், ஆன கலியர்-மண்டர்மள்ளர், ஏனைவாளுழவர்-ஏருளர்கூளியர், தானைத்தறு கண்-ணாளர்தம்பெயரே. ஆ-க௦.

பகைஞர்பெயர்:—தரியலர்தெவ்வர் - மேவலர்செறுநர், கருதலர் சேரலர் - இரிஞரொன்னார், ஒல்லாரரிகள் - நள்ளாரமாரர், ஒட்டார் புல்லார் - நேரார்நிகரார், ஒட்டலர்நேரலர் - இகலோரெதிர்ந் தோர், விட்டவர்மாற்றலர் - முனைந்தோ ரென்றாங், கொடிய பிறவும் - பகை ஞரென்றுரைப்பர். ஆ-௨௩.

மேவினர்பெயர்:—ஒல்லுநர்துன்னுநர்- ஒட்டுநரொன்றுநர், நள் ளுநர்தொடர்ந்தோர் - மேவினர்நாமம். ஆ-௬,

உறவின்பெயர்:—ஒக்கல்சுற்றம் - உறவுகிளைகேள், நட்புமேவி னர் - சார்ந்தவருற்றார், பந்தங்கூளி - கடும்புகுடும்பம், நந்தமர்சிறந் தோர் - நட்டோர்பரிசனம், அந்தமிலுறவென் - றறைந்தனர்புலவர். ஆ-கஎ.

ஆண்பாலின்பெயர்:—ஆடவர்மைந்தர்—காளைகுமரர், ஆடூஉமாந் தர் - மகன்புமான்மணாளன், கூடியவாண்பெயர் - ஆகக்கூறுவர். ஆ-௬.

பெண்பாலின்பெயர்:—பேதையங்கனை—வனிதையிளம்பிடி, மா துமடவாள் - மகடூஉமங்கை, மடந்தைகாரிகை - மானினிமஞ்சனி, மாயோளாட்டி-பாவைதெரிவை, தையரிவை - பெதும்பைபிணாமகள் நையுநுண்ணிடை - நாரியென்றாங், கிருயதுமிரண்டும் - பெண் பாற் கெய்தும். ஆ-௨௨.

எழுவகைப்பருவப் பெண்பாலாவன:—யேதைபெதும்பை - மங் கைமடந்தை. அரிவைதெரிவை - பேரிளம்பெண்ணென, எழுவகைப் பருவப் - பெண்பாற்கெய்தும். ஆ-எ.

தலைவிபெயர்:— கோமாள்பெருமாட்டி-குரத்தியையை, ஆசாள் சாமிலை-இறைமையாட்டி, அடிகளத்தை - தற்விபெயரே. ஆ-௧௦.

அருந்தவப்பெண்பெயர்:—பைம்மையுங்கௌந்தியும் - அருந்தவப் பெண்பெயர். ஆ-௨.

கலன்கழிமகளிர்பெயர்:—கைம்மையுங்கைனியும் - கலன்கழிமக ளிர். ஆ-௨.

மலடிப்பெயர்:—மைம்மைவந்தி - மலடிப்பெயரே. ஆ-௨.

பொதுப்பெண்பெயர்:—பரத்தையுங்கணிகையும் - சூளையும்பொ துப்பெண். ஆ-௩.

நாடகக்கணிகைபெயர்:—நடியேகூத்தி — நாடக்கணிகை.ஆ-௨.

பாண்மகள்பெயர்:—பாடினிவிறலி - பாட்டிமதங்கி, பாடன் மக டூஉ - பாண்மகளாகும். ஆ-௫.

அணியிற்பண்பில்உடுமையோவற்றன:—வரைவிலாடூஉ-மகடூஉப் பலபெயர், வாலாற்று முறைமையின் - வந்தனகொளலே. ஆ-௨.

உடனிகழ்வான்பெயர்:—எமிபுடனிகழ்வான். ஆ-௧,

தனியின்பெயர்:—தமிதனியாகும். ஆ—௧.

குறிஞ்சிநிலமக்கள்பெயர்:—குறவர்கனவர் - குன்றவர்புனவர், இறவுளர்குறிஞ்சி - நிலமக்கட்பெயரே. ஆ-௫.

குறிஞ்சிநிலப்பெண்கள்பெயர்:—கொடிச்சியர்குறத்தியர் - குறி ஞ்சிநிலப்பெண்பெயர். ஆ-௨.

குறிஞ்சிக்கிறைவன்பெயர்:—கானகநாடன் - பொருப்பன்பொரு நன், ஆனமலையன் - வெற்பன்சிலம்பன், சிறந்தநண்பனென் - றிவை முதலாக், குறிஞ்சிக்கிறைவன் - பெயரெனக்கூறுவர். ஆ-எ.

பாலைநிலமக்கள்பெயர்:—மறவரெயினர்-பாலைநிலமக்கள். ஆ-௨.

பாலைநிலப்பெண்கள்பெயர்:—மறத்தியரெயிற்றியர் - வன்கட் பிணுக்கள், அனைத்துமனன்னிலத் - தரிவையர்பெயரே. ஆ-௩.

பாலைக்கிறைவன்பெயர்:—மீளியுங்காளையும் - விடலையுமென்றி வை, பாலைக்கிறைவன் - பெயரெனக்கூறுவர். ஆ-௩.

பாலைநிலமக்கட்குமந்நிலத்தலைவர்க்கும் பொதுப்பெயர்:—கொலை ஞரெயினர் - வனசரர்சவரர், சிலவர்கானவர் - மாகுலவர்கிராதர், புளி னர்மறவர் - வேடரென்றுங், கனையவர்பொதுப்பெயர் -ஆதல் வேண் டும். ஆ-௧௧.

முல்லைநிலமக்கள்பெயர்:— முல்லையாளர் - கோவலரிடையர், சொல்லியவண்டர் - பொதுவரான்வல்லோர், குடவர்பாலர் - தொறுவர்கோவிந்தர், அண்டர்கோபாலர் - ஆயரமுதர், ஒன்றியமுல்லை-நிலைத்தவர்பெயரே. ஆ-கச.

முல்லைநிலமகளிர்பெயர்:—ஆய்ச்சியர்தொறுவியர் - பொதுவியர் குடத்தியர், வாய்த்தவிடைச்சியர் - முல்லைநிலமகளிர். ஆ-ரு.

முல்லைநிலத்தலைமகன்பெயர்:—அண்ணறோன்றல் - குறும்பொறைநாடன், கானகநாடன் - முல்லைத்தலைமகன். ஆ-ச.

நெய்தநிலமாக்கள்பெயர்:—பரதவர்நுளையர் - கடலர்வலையர், சலவர்திமிலர் - நெய்தநிலமாக்கள். ஆ-கூ.

நெய்தநிலப்பெண்பெயர்:— நுளைச்சியர்பரத்தியர் - நுரைகடற்பிணாக்கள். ஆ—௩.

நெய்தநிலத்துப்பமைப்போர்பெயர்:— அளவரந்நிலத் — துப்பமைப்போர்பெயரே. ஆ-க.

நெய்தற்றலைமகன்பெயர்:—கொண்கன்றுறைவன்-மெல்லன் புலம்பன், தண்கடற்சேர்ப்பன்-நெய்தற்றலைமகன். ஆ—ரு.

மருதநிலமக்கள்பெயர்:—களமர்தொழுவர்-மள்ளர்கம்பளர், வினைஞருழவர்—கடைஞர்கிளைஞரென், றனையவைக்ழனிக்-கடைத்தவர்பெயரே. ஆ-அ.

மருதநிலப்பெண்பெயர்:—உழத்தியர் கடைச்சியர்-ஆற்றுக்காலாட்டியர், அடுத்தகழனிக்-கடைத்தமகளிர். ஆ-௩.

மருதநிலத்தலைவன்பெயர்:—ஊரன்மகிழ்நன் -கிழவனென்றிவை, சாலிமருதத்-தலைவன்பெயரே. ஆ—௩.

மருதநிலத்தலைவிபெயர்:—மனைவிகிழத்தி-இல்லாளில்லென், றனையவைமருதத்-தலைவிக்காகும். ஆ-ச.

முல்லைத்தலைவிபெயர்:—அனையவைமுல்லைத்-தலைவிக்கு மாகும். ஆ-உ.

முன்றோன்றலின்பெயர்:—முன்னைமுன்னிளவல் - முன்றோன்றலாகும். ஆ-உ.

பின்றோன்றலின்பெயர்:—பின்னைபின்னிளவல் - பின்றோன்றலாகும். ஆ-உ.

சேட்டையின்பெயர்:—தௌவை முன்பிறந்தாள் - சேட்டையாகும். ஆ-உ.

தங்கையின்பெயர்:—தங்கைபின்னை-எங்கையுமாகும். ஆ-உ.

வழித்தோன்றலின்பெயர்:—மருமான் பிறங்கடையும் - புல்வழித் தோன்றல். ஆ-உ.

இளம்பிள்ளைகள்பெயர்:—குழவியுமகவும்-குட்டனும் பிள்ளையும், மழவுஞ்சேயும்-இளமைக்குவகுத்தனர். ஆ-சு.

பிள்ளைப்பன்மையின்பெயர்:—மகாருஞ்சிறுருமவர்- பன்மைவழக் கே. ஆ-௩.

தோழன்பெயர்:—நண்பன்பாங்கன் - எலுவன்கிளைஞன், தங்கிய கேள்வன்-தோழன்பெயரே. ஆ-ரு.

தோழன்முன்னிலையின்பெயர்:—ஏடாவென்பது—தோழன் முன் னிலைப்பெயர். ஆ-க.

பாங்கியின்பெயர்:—ஓரைபொய்தல்-இகுளையாய்ந்த,தோழிசேடி-இணங்கியபாங்கி. ஆ-ரு.

தோழிமுன்னிலையின்பெயர்:—எலாவுமேடியும்-தோழி முன்னிலை ப்பெயர். ஆ-உ.

காதலனென்னும்பெயர்:—கணவனுந்தோழனும்- புதல்வனுங்கா தலன். ஆ-௩.

காதலியென்னும்பெயர்.—மனைவியுந்தோழியும்- புதல்வியுங்காதலி ஆ-௩.

துணைவனென்னும்பெயர்:—தோழனுங்கணவனும் - துணைவனென் றாகும். ஆ-உ.

படையின்பெயர்:—தானேதண்டம்-அனீகம்வரூதினி,தானைபதா தி-பதாகினியூகம், வானியதிகம்—பாடிபகுதி, சேனைநிதானம்-திரள் படையென்ப. ஆ-கச.

கோடிப்படையின்பெயர்:--தார்நிரையாக்கம்- தூசிகொடிப்படை. ஆ-௪.

கடைக்கூழையின்பெயர்:—கூழைகூழ்தல்- கடைக்கூழையாகும். ஆ-உ.

படைவகுப்பின்பெயர்:—உண்டையுங்கையும் - ஒட்டும் யூகமும், வந்தவணியும்-படைவகுப்பின்பெயர். ஆ-ரு.

மானிடர்பொதுப்பெயர்:—மக்கண்மண்ணவர் - மனிதர்நரரென், றுத்தமாக்கள்-மானிடர் பொதுப்பெயர். ஆ-ரு.

மக்களாண்பொதுப்பெயர்:—மாந்தர்மைந்தர்-மக்களாண்பொதுப் பெயர். ஆ-உ.

மக்கட்பரப்பின்பெயர்:— மன்பதைபைஞ்ஞீன் - மக்கட்பரப்பே. ஆ-உ.

மக்கட்கூட்டத்தின்பெயர்:—ஓரையும்பண்ணையும் - ஆயமுங்குழுவும் கூறுபமாதோ-மக்கட்கூட்டம். ஆ-ச.

உடலின்பெயர்:—சட்டகமெய்யே-தாவரம்பூட்சி, அங்கங்காயம்-புதைபுறப்பியாக்கை, ஆதாரந்தேகம்-உருவம்படிவமென், றோதினர் நூலோர்-உடலின்பெயரே. ஆ-கங.

பிணத்தின்பெயர்:—அழனேகுணபம்-களேபாஞ்சவம், பிணமெனவைத்துப்-பேசினர்புலவர். ஆ-ச.

உடற்குறையின்பெயர்:—பூபந்தவந்தம் - மட்டை யுடற்குறை. ஆ-ந.

பாதத்தின்பெயர்:—சரண்பதங்காலடி-கழறாள்பாதம். ஆ-அ.

கரட்டின்பெயர்:—பரடேகாலடி-மிசைத்திரள்கரடே. ஆ-ந.

கணைக்காலின்பெயர்:—சங்கங்கணைக்கால். ஆ-க.

முழங்காலின்பெயர்:—சானுமுழந்தாள். ஆ-க.

தொடைப்பற்றின்பெயர்:—வாமமூரு - கவான்றொடைப்பற்றே. ஆ-ந.

குறங்கின்பெயர்:—ஊருவுங்கவானும்-சோகமுங்குறங்கே. ஆ-ந.

அல்குலின்பெயர்:—கடிதடநிதம்பம்-வடிவகலல்குல். ஆ-உ.

இடையின்பெயர்:—நுசுப்புமருங்குல்-நுண்ணிடையாகும். ஆ-உ.

மருங்குற்பக்கத்தின்பெயர்:—ஒக்கன்மருங்குல்-பக்கமாகும். ஆ-ந.

வயிற்றின்பெயர்:—குக்கிதுந்தம் - உதாஞ்சடரமென், றுந்த மடிவயின் - அகடொன்றியவயிற்றே. ஆ-ச.

ஆண்குறியின்பெயர்:—இலிங்கமுங்கோசமும் - ஆண்குறியாகும். ஆ-உ.

பெண்குறியின்பெயர்:—யோனியும்பகமும் – பெண்குறியாகும். ஆ-உ.

கொப்பூழின்பெயர்:—உந்திபோகில்-இலஞ்சியிதலை, வந்தநாபி-கொப்பூழாகும். ஆ-சு.

மார்பின்பெயர்:—அகலமருமசிறம் - உரமாகமார்பே. ஆ-ரு.

முலையின்பெயர்:—கொங்கைசுவர்க்கம்-குயந்தனநகிலம், தங்கிய குருக்க-ணம்மம்பயோதரம், இங்கிவைமாதர் - முலையெனவிளம்புவர். ஆ-அ.

முலைக்கண்ணின்பெயர்:—சூசுகஞ்சிலீமுகம் - முலைக்கண்சொல்லும். ஆ-உ.

தேமலின்பெயர்:—சுணங்குதேமல் - பொறியுத்திதிதலை * நுணங்குதிதனி—வசந்திகைநந்தி. ஆ-கூ.

கைத்தலத்தின்பெயர்: — அத்தம்பாணி - கரந்தோள்கைத்தலம். ஆ-ச.

அகங்கையின்பெயர்:—அங்கைகுடங்கை-அகங்கையாகும். ஆ-உ.

விரலின்பெயர்:—அங்குலிவிரலாம். ஆ-க.

நகத்தின்பெயர்:—உகிர்நகமாகும். ஆ-க.

தோளின்பெயர்:-புயமுமொய்ப்பும்-வாகுவுந்தோளே. ஆ-ங.

முதுகின்பெயர்:—வெரிநும்வென்னும்-புற முமுதுகே. ஆ-ங.

தோண்மேலின்பெயர்:—சுவலுஞ்செகிலும் - திகலமுந் தோண்மேல். ஆ-ங.

கழுத்தின்பெயர்:—கண்டமுங்கிரீவமும் - களனுமிடறும், கந்தரமைந்தும்—கழுத்தெனக்கழறுவர். ஆ-ரு.

பிடரின்பெயர்:—கயிலேசிறுபுரம்-எருத்தஞ்சுவல்பிடர். ஆ-ச.

பிறகின்பெயர்:—பிறமும்பிறக்கும்-அபரமும்பிறகே. ஆ-ங.

முகத்தின்பெயர்:—வதனமானனம்-வத்திரமுகமே. ஆ-ங.

உதட்டின்பெயர்:—அதரம்பாலிகை - இதழேயோட்டம், முத்தமுதடென-மொழிந்தனர்புலவர். ஆ-ரு.

பல்லின்பெயர்:—தந்தமுந்தசனமும்-தட்டமும்பல்லாம். ஆ-ங.

எயிற்றின்பெயர்:—முறுவலுநகையும் - மூரலுமெயிறும். ஆ-ங.

நகுதலின்பெயர்:—நகுதற்குமவையே - நாமமாகும். ஆ-உ.

அண்ணத்தின்பெயர்:—அணரியண்ணம். ஆ-க.

கீழ்வாப்புறத்தின்பெயர்:—அணல்கீழ்வாய்ப்புறம். ஆ-க.

உண்ணாவின்பெயர்:—அண்ணமுண்ணா-ஆகலுமுரித்தே. ஆ-க.

---

* நுணங்கு என்பது தொடைச்சுவைப் பயன்கருதிய அடைமொழியென்றறியாது சிலர் மயங்கிப் பரியாயமெனக்கொண்டனர். மற்றுமவரிவ்வாறு கொள்வன சிலவறிக.

நாவின்பெயர்:—தாலந்தாலு - நாவெனச்சாற்றுவர். ஆ-உ.

மூக்கின்பெயர்:—துண்டமுநாசியும்-கிராணமுமூக்கே. ஆ-ங.

கதுப்பின்பெயர்:—கபோலங்கவுளனு-கொடிறுகதுப்பே. ஆ-ச.

கண்ணின்பெயர்:—நாட்டநயனம்-நேத்திரம்விலோசனம், நோக்கந்தாரை - அம்பகம்பார்வை, அக்கம்விழிக்கோ - கண்ணாகும்மே. ஆ-கக.

நெற்றியின்பெயர்:—மத்தகமிலாடம்-முண்டகநுதல்குளம், நெற்றிபாலம் - எனநிகழ்த்தினரே. ஆ-எ.

புருவத்தின்பெயர்:—புரூரம்பிருகுடி-நுதலேபுருவம். ஆ-ங.

காதின்பெயர்:—கன்னமுஞ்செவியும்-காதின்பெயரே. ஆ-உ.

தலையின்பெயர்:—சிரமேசென்னி - உச்சிமுடிநவிரம், கம்மேயுவ்வி - சேகரந்தலையாம். ஆ-அ.

ஆண்மயிரின்பெயர்:—குஞ்சிநவிருளை-குடுமிதொங்கல், பங்கிபித்தை-ஓரிசிகையென், றிங்கிவையெல்லாம்-ஆண்மயிரென்ப. ஆ-கூ.

பெண்மயிரின்பெயர்:—கோதைநெறிமை-கூந்தலம்பால், ஓதிகூழை-பரிசாரங்கதுப்பு, கேசமளகம்—குழல்குரல்சுரியல், பேசின்மராட்டம்-பெண்மயிரென்ப. ஆ-கச.

மைந்தர்மயிரின்பெயர்:—கதுப்பேகேசம் - சுரியன்மைந்தர், மயிர்க்குமொருவழி-வருதற்குமுரிய. ஆ-ங.

பிறமயிரின்பெயர்:—ஓரிபங்கி-உளையேயுரோமம், கேசமாட்டம்-பிறமயிராகும். ஆ-சு.

மயிர்ப்பரப்பின்பெயர்:—சிரோந்தமுரோமம்- செறிமயிர்ப்பரப்பே. ஆ-உ.

மயிர்க்குழற்சியின்பெயர்:—கொந்தமளகம்-விலோதமயிர்க்குழற்சி. ஆ-ங.

மயிர்முடியின்பெயர்:—பின்னகம்பந்தம் - முடிமுச்சிகொண்டை, மன்னுசிகழிகை-குழல்சுடிகைமௌலி, இன்னவைமயிர்முடி - ஆகுமென்ப. ஆ-கூ.

சடையின்பெயர்:—பின்னல்சடிலம்-கோடீரம்வேணி,மன்னுமயிர்ச்சடை-எனவகுத்தனரே. ஆ-ச.

உறுப்பின்பெயர்:—அவயவங்காத்திரம்-அங்கமுறுப்பே, சினையென்றுரைத்தலும்-ஒருவழிச்சிவணும். ஆ-ச.

சந்தின்பெயர்:—கந்துங்கொளுத்தும்-கழுத்துஞ்சந்தாம். ஆ-ங.

இறையின்பெயர்:—மெய்த்தகுமிறையே - பிறங்கெனப் படுமே. ஆ-க.

உடற்றழும்பின்பெயர்:—செதுகையங்கிதம் - செறியுடற்றழும்பே. ஆ-உ.

கழலையின்பெயர்:—அரலைகழலை-யாகுமென்ப. ஆ-க.

நரம்பின்பெயர்:—நாடியுஞ்சிரையும்-நரம்பினுமம். ஆ-உ.

எலும்பின்பெயர்:—என்பத்தியங்கம்-எலும்பாகும்மே. ஆ-ங.

தலையோட்டின்பெயர்:—வெண்டலையோடே-கபாலமாகும். ஆ-ச

கழிபுடன்முழுவெலும்பின்பெயர்:—கழியுடன்முழுவென்பு - கங்காளமாகும். ஆ-க.

குடுமியின்பெயர்:—சிமிசிகைசிமிலி—சிக்கங்குடுமி. ஆ-ச.

உச்சியின்பெயர்:—நவிரஞ்சுடிகை—சுழியுச்சிநாமம். ஆ-ங.

இந்திரியத்தின்பெயர்:—கரணம் பொறிவாயில் - கந்தமிந்திரியம். ஆ-ச.

அன்றியும் சுவையொளியூறோசை-நாற்றமறியும், கருவிநாக்கண்-மெய்செவிமூக்கே. ஆ-ரு.

சீவன்பெயர்:—சீவனுயிராதன்—சேதனன்புற்கலன், அணுவொடு பசுவிய-மானனான்மா. ஆ-அ.

கற்ற நாவினன் கேட்ட செவியினன்
முற்ற வுணர்ந்த மூதறி வாளன்
நாகரிக நாட்டத் தாரிய னருவந்தை
தேறுங் காட்சிச் சேந்தன் திவாகரத்

திரண்டாவது

மக்கட்பெயர்த்தொகுதி

முற்றிற்று.

மூன்றாவது

# விலங்கின்பெயர்த்தொகுதி.

## மூலபாடம்.

சிங்கத்தின்பெயர்:—ஆளிமடங்கல்-அரிகண்டீரவம், கேசரிமிருக பதிவயப்போத்து, சீயம்வயப்புலி - பஞ்சானனம்வயமா, மேவியசிங் கம்-எனவிளம்பினரே. ஆ-கக.

புலியின்பெயர்:—கொடுவரியுழுவை, குயவரிவேங்கை, வல்லியம் வயமா—சார்த்தூலம் வியாக்கிரம், புல்புண்டரீகம்-வயவரியென்றிவை, பல்பொறிப்புலியின்-பெயரெனப்பகர்வர். ஆ—கக.

யானையாளிப்பெயர்:—அறுகுபூட்கை - ஆளியெனவே, பெறுமே யானை-ஆளிப்பெயரே. ஆ-௩.

யானையின்பெயர்:—தும்பிகடிவை - புகர்முகக்தோல்கரி, உம்பல் வயமா—பகடுநால்வாய், கரிணிகுஞ்சரம்-கயமேகாபம்,மருண்மாதந்தி-மாதங்கமொருத்தல், களிறுசிந்துரம்-கறையடியெறும்பி, வழுவைவா ரணம்-வேழம்வல்விலங்கு, நாகமதகயம்—அத்தியிபங்கும்பி, போதகமூ வாவே-தூங்கன்மாநிரம், மறமலிகைம்மா-ஆம்பல் கோட்டுமா, பிறவும் புழைக்கையோ-டியானைப்பெயரே. ஆ—௩அ.

களிற்றியானையின்பெயர்: — மதகரி தந்தி - வன்களிற்றியானை.

பெண்யானையின்பெயர்:—கரேணுபிடிபெண் — யானைப்பெயரே. ஆ—உ.

யானைக்கன்றின்பெயர்:—போதகந்துடியடி - கயமுனிகன்றும் ஆ-௩.

பிறந்தநிலப்பெயரையடுத்தியானைபெறும் பெயராவன:—கிரிசரம் வனசரம்-நதிசரமடுத்து, பெறுமேயானை - பிறந்தநிலப்பெயர். ஆ-௩.

குதிரையின்பெயர்:—துரகதந்துரங்கம் - வாசிபாய்மா, குரகதங் கிள்ளை - கந்தருவங்கற்கி, மண்டிலந்துரகம் - மாவேவபிவுளி, ஒண்டிற லுன்னி - இத்தரிகோணம், குந்தங்கொய்யுளை - கொக்குப்பரியயம். அச்சுவம்வயமா - புரவியரியோ, டித்திறமத்திரி - குதிரையினியற்பெ யர். ஆ-உ௫.

கவட்டம்பாடலம்-கோரங்கந்துகம், எனவும்பண்படுத்-தெண் ணப்படுமே. ஆ-௪.

இப்பெயர்களுள் கனவட்டமென்பது - வழுதியூர்மா. பாடலமென்பது - சேரனூர்மா. கோரமென்பது-சோழனூர்மா.

குறுநிலமன்னர்குதிரையின்பெயர்:— கந்துகங்குறுநில-மன்னரூர்மா. ஆ-க.

குதிரைக்குளம்பின்பெயர்:—குரமேயவற்றின்–குளம்பாகும்மே. ஆ-க.

குதிரைமார்க்கத்தின்பெயர்:—மாதிகமவற்றின் - மார்க்கமாகும். ஆ-க.

பசுவின்பொதுப்பெயர்:—ஆவும்பெற்றமும் - பசுவுமானும், கோவுங்குரால்தேனும் - பசுச்சாதிப்பொதுப்பெயர். ஆ சு.

பெண்பசுவின்பெயர்:—சுரபிதேனு – சுரைகபிலேசேதா, குரமே கோமளம் – பெண்பான்மேன. ஆ-எ.

ஆண்பசுவின்பெயர்:—பாறல்புல்லம் - பாண்டில்பசுமூரி, ஏறு பூணி - இருலேபெற்றம், எருதுசேவிடை - இடபமென்றிவை, கருதிற்போத்தின் - பெயரெனக்கருதுவர். ஆ-கந.

எருமையெனும்பெயர்:—எருமைச்சாதி - இருபாற்குமுரித்தே ஆ-உ.

எருமைப்பொதுப்பெயர்:—மேதிகாரான் – மகிடங்கவரியென், றேதியகான்கும் ௦ எருமைப்பெயரே. ஆ-ச.

எருமையாணின்பெயர்:—பகடுங்கடாவும்-அவற்றின்போத்தாம். ஆ-உ.

மலட்டெருமையின்பெயர்:—மைம்மையென்பது - மலட்டின்கிளவி. ஆ-க.

காட்டாவுன்பெயர்:—ஆமாகவயம்-காட்டாவாகும். ஆ-உ.

ஆட்டின்பொதுப்பெயர்:—மறியுதண்மோத்தை - மேழகம்வருடை, கொறியேதகர்கடா-கொச்சைமேடம், துருவைசெம்மறி-பள்ளை வெள்ளை, புருவைவற்காலிமை - ஆடெனப்புகல்வர். ஆ-கஎ.

துருவாட்டின்பெயர்: — துருவைகொறிமை - துருவாடாகும். ஆ-ந.

வெள்ளாட்டின்பெயர்:—வெள்ளைவெற்காலிமை - கொச்சைவெள்ளாடே. ஆ-ச.

---

௦ முன்சூத்திரத்தில் எருமையென்ப திருபாற்கு முரித்தென்றமையால், இச்சூத்திரத்தில் எருமையென்ப திருபாற் பொதுவாயிற்று.

துருவாடேற்றின்பெயர்:—ஏழகந்தகரே - மேழகங்கடாவென, ஆகுந்துருவாட் - டேற்றின்பெயரே. ஆ-௪.

வெள்ளாட்டேற்றின்பெயர்:—உதளேசெச்சை - மோத்தைவெள்ளாட்டின், நிகரிலேறென - நிகழ்த்தவும்படுமே. ஆ-௫.

துருவாடாது:—துருவைசெம்மறி-ஆடெனச்சொல்லுவர். ஆ-௨.

ஆட்டுக்குட்டியின்பெயர்.—குட்டன்சோரன் -மணங்குமறிபறழ், குட்டிப்பெயரெனக் - கூறினர்புலவர். ஆ-௫.

வரையாட்டின்பெயர்:—வருடைசரபம்-வரையாடாகும். ஆ-௨.

கவரிமாவின்பெயர்.—மானமாபட்டம் - ஏகினமன்னம், ஊனமில்கவரி - மாவெனவுரைப்பர். ஆ-௪.

கழுதையின்பெயர்:—கத்தபங்கோகு - வேசரிகழுதை, அத்திரிகாம்வா - லேபமுமாகும். ஆ-௬.

பன்றியின்பெயர்:—இருளிகனலி - ஏனஞ்சூகரம், கருமாமோழல் - வல்லுளிகேழல், வன்றிறல்வராகம் - எறுழிகோலம், ஒன்றியகளிறிவை பன்றியாகும். ஆ-௧௨.

மருட்டுப்பன்றியின்பெயர்:—கிருட்டிபோத்து - கோலங்கிரிகிரி, மருட்டுப்பன்றிக்கு - மாட்சிப்பெயரே. ஆ-௫.

முட்பன்றியின்பெயர்:—எய்யேமுண்மா - சல்லியமுட்பன்றி. ஆ-௫.

மானின்பெயர்:—சாரங்கநவ்வி - மறிபிணையரிணம், உழையெனச்சொல்லிய - ஆறுமானின்பெயர். ஆ-௬.

மானேற்றின்பெயர்:—இரலையுங்கலையும்-அவற்றினேறும். ஆ-௨.

புல்வாயின்பெயர்:—இரலைபுல்வாய்-ஆவலுமுரித்தே. ஆ-௧.

பூனையின்பெயர்:—விலாளம்பவனம் - வெருகுவிடருகம். பூசைபாக்கன் - மார்ச்சாலம்பூனை. ஆ-௭.

ஆண்பூனையின்பெயர்:— விலாளமுங்கடுவனும் - வெருகுமான்பெயர். ஆ-௫.

கரடியின்பெயர்:—உளியமெண்கு - பல்லங்காடி, குடாவடியென்றும் - கூறவும்படுமே. ஆ-௪.

நரியின்பெயர்:—இகலன்சம்பு - கோமாயுநரியே. ஆ-௫.

ஓரின்பெயர்:—இகலனோரி - என்றுமாகும். ஆ-௧.

கீரியின்பெயர்:—நகுலங்காத்திரம் - கீர்வைகீரி. ஆ-௫.

முயலின்பெயர்:—சசமுயலென்று - சாற்றப்படுமே. ஆ-௧.

கத்தூரியின்பெயர்:— மறுவிநாவி - மான்மதந்துருக்கம், நாரந்த நானம் - மறுவல்கத்தூரி. ஆ-எ.

குரங்கின்பெயர்:—அரியேகோகுலம்-கடுவன்கோடரம், கவியே யூகம்—மந்திமர்க்கடம், நிரந்தரம்வானரம்-என்றிவைபத்தும், குரங்கின் பெயரெனக் - கூறல்வேண்டும். ஆ-க0.

பெண்குரங்கின்பெயர்:—மந்தியூகம் - மற்றதன் பெண்பெயர். ஆ-உ.

கருங்குரங்கின்பெயர்:—காருகம்யூகம்-கருங்குரங்காகும். ஆ-உ.

முசுவின்பெயர்:—ஓரியுங்கலையும்-கடுவனுமூசுவே. ஆ-ஙூ.

நாயின்பெயர்:—எகினன்சூரன் - முடுவல்சுணங்கன், ஞமலிகுக் கன் - ஞாளிசுவாநாய். ஆ-அ.

பெண்ணாயின்பெயர்:— முடுவல்பெண்ணாய் - ஆகலுமுரித்தே. ஆ-க.

உடும்பின்பெயர்:—உடும்பேமுசலிகை-கோதாவாகும். ஆ-உ.

அணியின்பெயர்:— வெளிலேயணிலாம் - எனவிளம்பினரே -க.

ஓந்தியின்பெயர்:—அண்டசமோதி - சரடம்சாயாதனம், ஓமான் தண்டு - ஓந்தியென்றிசைப்பர். ஆ—ரு.

பச்சோந்தியின்பெயர்:—பச்சோந்திகாம-ரூபிப்பெயரே. ஆ-க.

மூஞ்சூறின்பெயர்:—சுண்டன்சூரன்-கசுந்தரிமூஞ்சூறு. ஆ-ஙூ.

எலியின்பெயர்:—சிகரியிரும்பன் - எலியெனப்படுமே. ஆ-உ.

காரெலியின்பெயர்:—கருப்பைகாரெலி. ஆ-க.

பெருச்சாளியின்பெயர்:—ஆகுமூடிகம்-ஆம்பெருச்சாளி. ஆ-உ.

ஒருசார்விலங்கேற்றின்பெயர்:—களிறுமாவும்-ஒருத்தலுமேறும், போத்தும்பகடும்-கலையுமூம்பலும், கடுவனுஞ்சேவலும்-தகரு மேட் டையும், ஒருசார்விலங்கின் - எற்றிற்குரிய. ஆ—கஉ.

இவற்றுள்களிறெனும்பெயர்:—வேழமுங்கேழலும - விதந்துகளி றென்ப.

மாவெனும்பெயர்:—குதிரையும்யானையும் - பன்றியுமாவே.

ஒருத்தலெனும்பெயர்:—புலியுழைப்புல்வாய்—மரையேயெருமை, கவரியானை - பன்றிகாடி, உரியவாகும் - ஒருத்தற்பெயர்க்கே. •

ஏறெனும்பெயர்:—கவரிபன்றி - மரையுழைபுல்வாய், எருமை யெருதுசுற-வேறெனப்படுமே. துருவாடேறு - என்னவும்படுமே.

போத்தெனும்பெயர்:—புலியேமரையே - புல்வாய்பெற்றம், எருமையென்றிவற்றின் - ஏறுபோத்தே. பூணுபுநீர்வாழ் - சாதியும்போத்தே. குதிரையாணும்-போத்தெனப்படுமே. வெருகுபோத்து-என்னவும்படுமே.

பகடெனும்பெயர்:—யானைபெற்ற-எருமையேற்றை, தானே பகட்டென் — றுரைக்கத்தகுமே.

கலையெனும்பெயர்:—மானேமுசுவே — கலையொடுவருமே.

உம்பலெனும்பெயர்:—யானையும்யாட்டின்—ஏற்றையுமும்பல்.

கடுவனெனும்பெயர்:—குரங்கும்வெருகும் - கடுவனென்ப.

சேவலெனும்பெயர்:கோழியுமன்னமும் - சேவலாகும்.

தகரெனும்பெயர்:—சுறுகளிறுளி - துருவாட்டேற்றை, தகரெனு நாமம் - தக்கதென்ப.

ஏட்டையெனும்பெயர்:—எருமைப் பகடையும்-வெருகினேற்றையும், வருபவேட்டை-எனவகுத்தனரே.

அன்றியும், சேவெனும்பெயர்:—எருமைபுல்வாய்-ஏறு சேவே.

ஒருசார்விலங்கின் பெண்பெயர்: — பெட்டையும்பிணையும்-பிணாவுமானும், நாகுமூடும்-கடமையும் பாட்டியும், மந்தியுமொருசார்-விலங்கின்பெண்பெயர். ஆூ-சூ.

இவற்றுள்பெட்டையெனும்பெயர்:—ஒட்டகங்குதிரை - கழுதைமரையிவை, பெட்டையெனும்பெயர்க்-கெண்ணப்பெறுமே.

பிணையெனும்பெயர்:—புலியுழைபுல்வாய்—கவரியென்றிவை, பிணையெனும்பெயரிற் - பேசப்படுமே. யானைகுதிரை - ஒட்டகங்கழுதை, ஆனபிணையென்-றறைதற்குரிய.

பிணாவெனும்பெயர்:—பன்றிபுல்வாய்-நாயெனமூன்றும்,பின்றாக்காட்சி-பிணாவொடுவருமே.

ஆனெனும்பெயர்:—எருமையும்பசுவும்-மரையுமென்ன, வருபவைமூன்றும்-ஆனெனப்படுமே.

நாகெனும்பெயர்:—மரையும்பெற்றமும் எருமையுநாகே, நீர்வாழ்சாதி-பெண்ணினநாகே.

மூடு-கடமை—எனும்பெயர்:—மூடுங்கடமையும்—ஆடல்பெறுன்.

பாட்டியெனும்பெயர்—பாட்டியென்ப-பன்றியுநாயும். நரியிற்பாட்டி-நடைபெற்றியலும். ஒருசார்பிலங்கின்-பெண்பெயர்க்குரைப்பர்.

மந்தியெனும்பெயர்:—குரங்குமுசுமும்—முசுவுமென்றிவை, வருங் காற்பெண்பெயர்-மந்தியென்றாகும்.

பெண்ணெனும்பெயர்:—பெண்பாலெவையும்-பெண்ணெனப்படுமே. அன்றியும் பெண்பாலெவையும்-பிணாவென்பவொருசார்.

ஆணெனும்பெயர்:—ஆண்பாலெவையும்-ஆணெனப்படுமே.

போதகமெனும்பெயர்:—அரிமாயானை-புலியேயனைய,இனையவேற்றை-போதகமென்ப.

விலங்கின்பிள்ளைப்பெறும்பெயர்:—குருளையுங்குட்டியும் - பறழும் பார்ப்பும், பிள்ளையுமறியும்- கன்றுங்குழவியும், பெறுமேவிலங்கின்-பிள்ளைப்பெயரே.

இவற்றுள்குருளை—பறழ்-என்னும்பெயர்:— புலியேயன்றி—முயலுய்நரியிவை, குருளைபறழெனக்-கூறினர்புலவர்.

பிள்ளையென்னும்பெயர்:—பிள்ளைப்பெயரே - நாயன்றிப் பெறுமே.

மறியெனும்பெயர்:— ஆடுமான்குதிரை—அழுங்குமறியென்ப.

கன்றெனும்பெயர்:—கடமையும்யானையும் - குதிரையுங்கழுதையும், மரையுமெருமையும்-மானுமொட்டகமும், கவரியுங்காமும்- கன்றெனப்படுமே.

குழவியெனும்பெயர்:—யானையுங்கடமையும் - எருமையுமரையும், ஆணுங்குழவிப்-பெயரோடடையும்.

புறழ்-குட்டி-எனும்பெயர்:—வெருகேயன்றி - அணிலெனமூன்றும், பறழேகுட்டிப்-பாலவாகும்.

குருளை கன்று-குழவி-குருளை-எனும்பெயர்:—குருளையுங் கன்றும்- ஆனிற்கொளலும், குழவியுங்குருளையும் - முசுவிற்பெறலும், ஒருசார் விலங்கின்-பிள்ளைப்பெயரே.

பிள்ளை-பார்ப்பு-எனும்பெயர்:—பிள்ளையும்பார்ப்பும் - தவழ்சாதி பெறுமே.

ஏற்றை-குருளை-எனும்பெயர்:—நந்திஏற்றையும்-அரவிற்குருளையும், வந்துழியொருசார்-வழங்குதற்குரிய.

குரங்குமுதலிய கோடுவாழ்விலங்கிற்குரிய பிள்ளைப்பெயர்:—குழவியுமகவும்-குட்டியும்பிள்ளையும், பறழும்பார்ப்பும்—பகரப்படுமே.

கோடுவாழ்விலங்காவன:—குரங்குமுதலாயின - கோடுவாழ்விலங்கே.

விலங்கின்பொதுப்பெயர்:—*மாவுமாவும்—விலங்கின் பொதுப்பெயர்.*

காலியினம்-அல்லது - பசுக்கூட்டத்தின்பெயர்:—*காலியினநிரை தொழுவுமாகும்: ஆ-உ.*

விலங்கின்கூட்டத்தின்பெயர்:—*கணமுஞ்சாலமும்-வியூகமுங்குலமும். விருந்தமுங்கூட்டமும் — எனப்பெயர்பெறுமே- வந்துழிபெறுதற்-குரியவென்ப. ஆ-ங.*

வாலுறுப்பின்பெயர்:—*வாலதிதோகை - கூலமிலாங்கூலம், வாலுறுப்பாக-மதித்தனர்புலவர். ஆ-ச.*

வாற்கீழிடத்தின்பெயர்:— *வெருகபெ.ன்பது - வாற்கீழிடமாம் ஆ-க.*

யானைச்செவியின்பெயர்:—*யானைச்செவியே - கன்னம்தாலம். ஆ-உ.*

யானைமுதுகின்பெயர்:—*மஞ்சுமுதுகென — வகுத்தனர்புலவர். ஆ-க.*

யானைவாலின்பெயர்:—*வாலதிதால - வட்டமாகும். ஆ-உ.*

யானைமதத்தின்பெயர்:—*கடமுந்தானமும்-மதமாகும்மே ஆ-உ.*

மதம்பாய்கவுட்சுவட்டின்பெயர்.— *கரடமதம்பாய் - கவுட்சுவடாகும். ஆ-க.*

மும்மதமாவன:—*கன்னமதங்கோசமதம் - கைம்மதமூவகையே. ஆ-ங.*

தாளின்பெயர்:—*காத்திரமபரம் - தாளாகும்மே. ஆ-உ.*

குதிரைவாயினும் யானைக்கையினுமுமிழ்நீரின்பெயர்:— *இவுளிவாயினும் - யானைக்கையினும், உமிழ்நீர்விலாழியென் - றுரைக்கத்தகுமே. ஆ-க.*

எருத்தின்முரிப்பின்பெயர்:—*இமிலேயேற்றின் - திரண்முரிப்பாகும். ஆ-க.*

முலேமேற்றிரள்சுரப்புவடிவின்பெயர்:— *செருத்தன்முலேமேல்-திரள்சுரப்புவடிவே. ஆ-க.*

முலேயின்பெயர்.—*சுரையென்பெயரே-முலேயிற்காகும். ஆ-க.*

கொம்பின்பெயர்:—*கோடுமருப்பும்-உலவையுங்கொம்பே. ஆ-ங.*

தோலின்பெயர்:—*வடகங்கிருத்திமம் - சருமந்துவக்கு, பச்சை*

புறணி — உரிபோர்வையதள், ஒத்த துருத்தியொடு - பத்துந்தோலே. ஆ-௧0.

ஊனின்பெயர்:—தசைதடி விடக்கு—நூவள்ளூரம், பிசிதம்புலால் புண்-புலவுமூனே. ஆ-௯.

ஆவினிறைச்சியின்பெயர்:—ஆவினிறைச்சி - வள்ளூர மாகும்' ஆ-௧.

உதிரத்தின்பெயர்:—எருவைசெந்நீர் - இரத்தம்புண்ணீர், குருதி. சோரி-நெய்த்தோர் சுடுவல்,கறைசோணிதமென-ஈரைந்கிளவியும், உதிரமென்ப-உணர்ந்திசினோரே. ஆ-௧0.

நிணத்தின்பெயர்:—நெய்புமிழுதும்-விழுக்குநிணப்பெயர். ஆ-௩

முடையின்பெயர்:—பூதிபூழ்த்தல்-தசைபுலவுமுடையே. ஆ-௪.

சூலின்பெயர்:—பிளுஞ்சினையும்-கருவுஞ்சூலே. ஆ-௩.

பாம்பின்பெயர்:—அரவேநாகம்-அங்கதம்புயங்கம், உரகம் பாந்தள் - அரியகிபோகி, பன்னகங்கட்செவி - பணிவியாளம் பாம்பே. ஆ-௧௩.

பெரும்பாம்பின்பெயர்:—பாந்தண்மாசுணம்- பெரும்பாம்பாகும். ஆ-௨.

பாம்பின்படத்தின்பெயர்:—பையும்பணமும் - பாம்பின் படமே. ஆ-௨.

பாம்பின்படப்பொறியின்பெயர்:—உத்தியுந்துத்தியும்-உரகபடப்பொறி. ஆ-௨.

நஞ்சின்பெயர்:—கடுவேயாலம்-காளகூடம், விடங்காளங்காளம் - காரிநஞ்சே. ஆ-௭.

கருடன்பெயர்:—வைனதேயனுவணன்-பன்னகவைரி, கலுழன் புள்ளரசு-கருடனாகும். ஆ-௫.

கழுகின்பெயர்:—கருவையுமுவணப்-புள்ளுங்கழுகே. ஆ-௨.

சரபத்தின்பெயர்:—சிம்புள்வாருண்டகம் - சம்பரந் துரோணம், எண்காற்சரபத்-தின்பெயராகும். ஆ-௪.

பருந்தின்பெயர்:—பாருஞ்சேனமும்-கங்கமும்பருந்தே. ஆ-௩.

சாதகப்புள்ளின்பெயர்: —வானம்பாடி-சாதகப்புள்ளே. ஆ-௧.

கேகயப்புள்ளின்பெயர்:—அசுணமாவே-கேகயப்புள்ளே. ஆ-௧.

குயிலின்பெயர்:—கோகிலங்களகண்டம்-பிகங்குயிலாகும். ஆ-௩.

செம்போத்தின்பெயர்:—குக்கில்செம்போத்து- சகோரமுமதற்கே. ஆ-௨.

கோழியின்பெயர்:—குக்குடஞ்சேவல், வாரணங்கோழி. ஆ-௩.

கூகையின்பெயர்:—கூகைகுடிஞை-குராலேகோட்டான். ஆ-௩.

மயிலின்பெயர்:—கேகயஞ்சிகண்டி-சிகியேமயூரம், தோகைகே தாரம் - மஞ்ஞைபிணிமுகம், ஆயினவெல்லாம் - மயிலெனவறைவர். ஆ-அ.

மயிற்பீலியின்பெயர்:—தொங்கலுங்கலாபமும் - இறகுங்கூழை யும், இங்கிவைமயிலின்-பீலியென்ப, தங்கியவொருவழி-கூந்தலெனத் தரும். ஆ-௫.

இறகினடிமுள்ளின்பெயர்:—முருந்தேயிறகின் - முதன்முள்ளா கும். ஆ-க.

மயிற்சிகையின்பெயர்:—அனந்தமயூரம்-விரிசிகையாகும். ஆ-க.

காக்கையின்பெயர்:—காரிவாயசம்-கொடிகரும்பிள்ளை, தேறி ஞன்கும் - காக்கையாகும். ஆ-௪.

வலியன்பெயர்:—வலியன்பாரத்து - வாசன்வயவன். ஆ-௨.

கரிக்குருவின்பெயர்:—கஞ்சனம்வலியன் - கயவாய்கரிக்குரீஇ. ஆ-௩.

கிளியின்பெயர்:—வன்னிதத்தை-சுகமரிசுவாகதம், கிள்ளையவந் திகை - கீரங்கிளியே. ஆ-அ.

கருங்கிளியின்பெயர்:—கீரங்கிள்ளை-கருங்கிளியாகும். ஆ-௨.

புறவின்பெயர்:—தூதுணங்களரவம் - பாராவதத்தொடு, சீர் சால்கபோதமும் - புறவெனப்படுமே. ஆ-௪.

மாடப்புறவின்பெயர்:—காளபதமே - மாடப்புறவாம். ஆ-க.

கரும்புறவின்பெயர்:— கபோதம்பாராவதம் - கரும்புறவாகும் ஆ-௨.

கவுதாரியின்பெயர்:—இதலேபூழான்-சிவல்கவுதாரி. ஆ-௩.

அன்றிலின்பெயர்:—கிரவுஞ்சமன்றில். ஆ-க.

ஊர்க்குருவியின்பெயர்:—சகடமூர்க்குருவி. ஆ-க.

சிவலின்பெயர்:—இதலேபகண்டை-சிவலாகும்மே. ஆ-௨.

பகண்டையின்பெயர்:—சில்லைபகண்டை - ஆமெனச் செப்புவர். ஆ-க.

நாகணவாய்ப்புள்ளின்பெயர்:—பூவைசாரிகை-நாகணவாய்ப்புள். ஆ-உ.

காடையின்பெயர்:—குறும்பூழ்காடையின்-பெயரெனக் கூறுவர். ஆ-க.

மீனெறிசிறுபறவையின்பெயர்:—சிரலேசிச்சிலி - மீனெறிசிறுபறவை. ஆ-உ.

பறவைப்பொதுப்பெயர்:—புள்ளுப்போகில்-சகுணம் பிணிமுகம், ஒள்ளியபறவைக் - கெல்லாம் பொதுப்பெயர். பதங்கமுங்ககமும்-விகங்கமுமாகும். ஆ-எ.

அன்னத்தின்பெயர்:—ஓதிமமஞ்சம்-எகினமன்னம், நீதியினுன்னமும்-அவ்வினப்பறவை. ஆ-ச.

அன்னச்சிறகின்பெயர்:—தூவியன்னச் - சிறகெனச் சொல்லுவர். ஆ-க.

சக்கரவாகத்தின்பெயர்:—நேமிப்புள்ளும்-சகோரமுமென்றிவை, ஆகுஞ்சக்கர-வாகப்பெயரே. ஆ-உ.

பெருங்குருகின்பெயர்:—யானையுண்குருகு – பெருங்குருகாகும் ஆ-க.

கோய்யடிநாரையின்பெயர்:—குருகுவெண்டானம் - கொய்யடிநாரை. ஆ-உ.

பெருநாரையின்பெயர்:—பெருநாரைபோதா - பிதாவுமாகும். ஆ-உ.

வெண்ணாரையின்பெயர்:—வெண்ணாரைசாரசம். ஆ-க.

கருநாரையின்பெயர்:—கருநாரைசிகரி. ஆ-க.

நிலாமுகியின்பெயர்:— சகோரம்பேராந்தை-தண்ணிலாமுகியே. ஆ-உ.

நீர்க்காக்கையின்பெயர்:—காண்டநீர்க்காக்கை. ஆ-க.

சம்பங்கோழியின்பெயர்:—கம்புள்சம்பங்கோழி. ஆ-க.

கோக்கின்பெயர்:—குரண்டமும்பகமும்-கொக்கின்பெயரே. ஆ-உ.

வண்டின்பெயர்—அளியேகேசரம் - அறுபதங்கமுதொடு, வரியேசுரும்பு - சிதன்சூதம், அரிமாபிரமரம் - அராபதம் வரிக்கடை, பிரசந்தும்பி - மதுகரமிஞிறு, விரவியதேனி - வண்டெனப் படுமே ஆ-கக.

ஆண்வண்டின்பெயர்:—சுரும்பவற்றுணை - சொல்லவும் படுமே. ஆ-க.

தும்பியின்பெயர்:—மதுகரந்தும்பி-ஆகவும்வைப்பர் ஆ-க.

இந்திரகோபத்தின்பெயர்:—முனியன்மூதா - இந்திர கோபம். ஆ-உ.

விட்டிற்பறவையின்பெயர்:—பதங்கமுஞ்சலபமும் - விட்டிற்பறவை. ஆ-உ.

சிள்வீட்டின்பெயர்:—சிதடிநெடிசில்லிகை—சில்வீடாகும். ஆ-ந

நுளம்பின்பெயர்:— அருலமுஞல்வலு - கொள்ளலுநுளம்பே. ஆ-ச.

கோசுகின்பெயர்:—மசகங்கொசுகென-வகுத்தனர்புலவர். ஆ-க.

துருஞ்சிலின்பெயர்:—துருஞ்சிலாலாலம். ஆ-க.

வாவலின்பெயர்:—அஞ்சலிகைவாவல். ஆ-க.

சேவலெனும்பெயர்:— மயிலொழித்தெல்லாம் — பறவையினாண்பெயர், பயிலுஞ்சேவல் - என்மொழிப்பால.

போத்தெனும்பெயர்:—மயிலேயாமாலொடு - போத்தெனப்படுமே. ஆ-ரு.

புள்ளின் பெண்பெயர்:—பெட்டைபெடைபேடை - புள்ளின் பெண்பெயர். ஆ-ரு.

அளகெனும்பெயர்:—கோழிகூகை - பெண்பெயரல்லன, ஆயுங்காலை - அளகெனவறைவர்.

பார்ப்பு பிள்ளையெனும்பெயர்:— பார்ப்பும்பிள்ளையும் - பறப்பவற்றிளமை.

பறவைமுட்டையின்பெயர்:—அண்டமுஞ்சினையும் - அவற்றின் முட்டை. ஆ-உ.

வாயலகின்பெயர்:—துண்டமுமூக்கும் - வாயலகாகும். ஆ-உ.

இறகின்பெயர்:—பறையுந்தூவியும் — சிறையும்பிச்சமும், குரல் கூழையென்றிவை - இறகின்பெயரே. ஆ-சு.

புள்ளொலிக்கூட்டத்தின்பெயர்:—தழுனிபுள்ளொலி - கூட்டமாகும். ஆ-க.

புள்ளீட்டத்தின்பெயர்:—தொழுதிபுள்ளீட்டம். ஆ-க.

முதலையின்பெயர்:—கிஞ்சுமாரமும்—இடங்கருங்காரமும், முசலியும்வன்மீனும் - முதலையாகும். ஆ-ரு.

ஆண்முதலையின்பெயர்:— கராமவற்றொனை-கருதல்வேண்டும். ஆ-க.

சுறுமீனின்பெயர்—மகரஞ்சுறுமீன் - ஆகவைப்பர். ஆ-க.

இறுன்மீனின்பெயர்:—இறவேயிறுன்மீன். ஆ-க.

கெளிற்றிமீனின்பெயர்:—கெடிறுகெளிற்றுமீன். ஆ-க.

மீனின்பொதுப்பெயர்:—மயிலைமீனம் - மற்சமீன்பொதுப்பெயர். ஆ-ங.

பெருமீனின்பெயர்:—யானைமீன்றிமி – பெருமீனாகும். ஆ-உ.

யானைமீனைவிழுங்குமீனின்பெயர்:—யானையைவிழுங்குமீன்-திமிங்ககிலமென்ப. ஆ-க.

திமிங்கிலத்தைவிழுங்குமீனின்பெயர்:— அம்மீனைவிழுங்குமீன் திமிங்கிலகிலமே. ஆ-க.

மலங்கின்பெயர்:—ஏனைமலங்கு - நாறையென்றாகும். ஆ-ங.

சங்கின்பெயர்:—நந்துபணிலம் - வளைநாகுசுரிமுகம், கம்புகோடு-சங்கெனப்படுமே. ஆ-எ.

சிறந்தசங்கின்பெயர்:—சங்கிற்சிறந்தது - சாதிவலம்புரி, பொங்கியகொக்கரை - என்றும்புகல்வர். ஆ-ங.

வலம்புரியிற்சிறந்தசங்கினபெயர்:— அங்கதிற்சிறந்தது – சலஞ்சலமென்ப. ஆ-க.

சலஞ்சலத்திற்சிறந்தசங்கின்பெயர்:—அதிலுஞ்சிறந்தது - பாஞ்சசன்னியம். ஆ-க.

நத்தையின்பெயர்:—கருநந்துநாகு - சுரிமுகங்கூனத்தை. ஆ-ச.

கிளிஞ்சிலின்பெயர்:—இறலெருந்தேரம்-கிளிஞ்சிலென்ப. ஆ-உ.

சிப்பியின்பெயர்:—இப்பிசுத்தி – சிப்பியாகும். ஆ-ங.

பல்லியின்பெயர்:—புள்ளிகௌளி - கோகிலம்பல்லி. ஆ-ங.

தவளையின்பெயர்:—அரிமரைநீகம் - தேரைமண்டூகம், வருபவையைந்தும் - தவளைப்பெயரே. ஆ-ரு.

ஆமையின்பெயர்:—கச்சபங்கூர்மம் - கமடமாமை. ஆ-ங.

பெண்ணாமையின்பெயர்:—துளிபெண்ணாமை. ஆ-க.

அட்டையின்பெயர்:—சலுகமட்டை. ஆ-க.

நண்டின்பெயர்:—அலவனள்ளி - குளிரென்றார்மதி, களவ னென்றிவை - கர்க்கடகப்பெயரே. ஆ-சு.

ஆணண்டின்பெயர்:—அலவனுணென் - றறைதற்குமுரித்தே. ஆ-க.

உளுவின்பெயர்:—உளுசுவாவே. ஆ-க.

எறும்பின்பெயர்:— உறவியெறும்பே. ஆ-க.

தேளின்பெயர்:—தெறுக்கால்பறப்பன் - தேளேவிருச்சிகம்,அல மென்பெயரும் - தேளின்மேற்றே. ஆ-ரு.

சிலந்தியின்பெயர்:—சிலம்பியுமூலூதையும் - சிலந்தியென்றாகும். ஆ-உ.

நாகரவண்டின்பெயர்:—நாகரவண்டின்-நாமமொள்ளே. ஆ-க.

கறையான்பெயர்:—சிதலையாழல்-செல்லேகறையான். ஆ-ங.

புழுவின்பெயர்:—கிருமியுங்கீடமும்-புழுவின்பெயரே. ஆ-உ.

கோற்றேனின்பெயர்:—கோற்றேன்பிரசம். ஆ-க.

தேன்கூட்டின்பெயர்:—இறாறேன்கூடே. ஆ-க.

கோற்புழுவின்பெயர்:—கோற்புழுவுலண்டு-கீடமுமாகும். ஆ-உ.

காதலி கையிற் போதிப் பெருந்தவன்
தெவ்வடு கால வைவே லெழினி
அவ்வை பாடிய வம்பற் கிழவன்
றேன்றூர்ச் சேந்தன் றெரிசொற் றிவாகரத்துள்.

மூன்றவது
விலங்கின்பெயர்த்தொகுதி
முற்றிற்று.

---

# நான்காவது மரப்பெயர்த்தொகுதி.

## மூலபாடம்.

தருவின்வருக்கமாவன:—சந்தானம்தேவ - தாரங்கற்பகம், மந் தாரம்பாரி - சாதமென்ப. ஆ-ரு.

சந்தனத்தின்பெயர்:—சாந்தமலயம் - சந்திரதிலகம், எய்ந்த வா ரம் - சந்திவைசந்தனம். ஆ-ரு.

அகிலின்பெயர்:—அகருவும்பூழிலும் - அகிலெனவறைவர், பக ரிற்காக - துண்டமுமாகும். ஆ-ரு.

ஆச்சாமரத்தின்பெயர்:—சாலமராமரம் - ஆவேயாச்சா. ஆ-ரு.

மகிழ்மரத்தின்பெயர்:-வகுளமிலஞ்சி - மகிழ்மாமென்ப. ஆ-உ.

தேக்கின்பெயர்:—சாதிதேக்கே. ஆ-க.

சண்பகத்தின்பெயர்:—சம்பகஞ்சண்பகம். ஆ-க.

ஆலின்பெயர்:—பூதவங்கான்மரம் - வடமரந்தொன்மரம், ஓதிய பழுமரம் - கோளியாலே. ஆ-ரு.

அரிசின்பெயர்:—கணவம்பணையே - மாரமரம்போதி, அச்சுவத் தம் - பிப்பிலமரசே. ஆ-ரு.

அசோகின்பெயர்:—பிண்டிசெயலை - காகோளிபசோகு. ஆ-ரு.

இரத்தின்பெயர்:—இரத்தியில்லி. ஆ-க.

மருதின்பெயர்:—அருச்சுனமருதே. ஆ-க.

கொன்றையின்பெயர்:—இதழிகடிக்கையா-ரக்குவதங்கொன்றை. ஆ-ரு.

குராவின்பெயர்:—கோட்டங்குடிலம்-குராவெனக்கூறுவர், ஆ-உ

நாவலின்பெயர்:—சம்புநாவல். ஆ-க.

வேம்பின்பெயர்:—நிம்பம்வேம்பே. ஆ-க.

அத்தியின்பெயர்—அதவுதும்பரம் - அத்தியாகும். ஆ-உ.

புளிமாவின்பெயர்:—ஆம்பிரஞ்சூதம் - மாழைபுளிமா. ஆ-ரு.

தேமாவின்பெயர்:—சூதஞ்சேதாரம் - ஆம்பிரங்கொக்கு, தேர் மாமரத்திவை - தேமாவாகும். ஆ-ச.

இருப்பையின்பெயர்: — மதூகமிருப்பை - எனவகுத்தனரே. ஆ-க.

செருந்தியின்பெயர்:-பஞ்சரஞ்செங்கோடு-செருந்தியாகும். ஆ-உ.

கோங்கின்பெயர்:—ஞாழல்துருமோற்பலம்-கன்னிகாரம், பவனி பிணரிவ் - வைந்துங்கோங்கே. ஆ-ரு.

பச்சிலைமரத்தின்பெயர்: — பசும்பிடிதமாலம் - பச்சிலையாகும். ஆ-உ.

வன்னியின்பெயர்:—கலிகஞ்சமியே-குலிசம்வன்னி. ஆ-ரு.

கருங்காலியின்பெயர்:—கதிரங்கருங்காலி. ஆ-க.

எட்டியின்பெயர்:—காஞ்சிரையெட்டி. ஆ-க.

செங்கருங்காலியின்பெயர்:—சிறுமாரோடம் - செங்கருங்காலி. ஆ-க.

புன்னையின்பெயர்:—புன்னை புன்னாகம். ஆ-க.

சுரபுன்னையின்பெயர்:—வழைசுரபுன்னை. ஆ-க.

புனமுருங்கையின்பெயர்:—புன்கென்கிளவி - புனமுருங்கைப்பெயர். ஆ-க.

ஆத்தியின்பெயர்:—ஆரேதாதகி-ஆத்தியாகும். ஆ-உ.

மாஞ்சாடிமரத்தின்பெயர்:—திலகமஞ்சாடி. ஆ-க.

இலவமரத்தின்பெயர்:—இலவம்பொங்கர். ஆ-க.

நெல்லியின்பெயர்:—ஆமலகநெல்லி. ஆ-க.

கடுமரத்தின்பெயர்:—அரிதகிகடுமாம். ஆ-க.

புளியின்பெயர்:—சிந்தஞ்சிந்தூரம் - சிறந்தவாம்பிரம், வந்ததிந்திருணி—ங்கினம்புளியே. ஆ-ரு.

குருந்தின்பெயர்:—குருந்துகுருந்தம். ஆ-க.

வெட்பாலையின்பெயர்:—குடசம்வெட்பாலே. ஆ-க.

குமிழின்பெயர்:—கூம்பல்கடம்பல்-குமிழெனக்கூறுவர். ஆ-உ.

குடைவேலின்பெயர்:—உடைகுடைவேலே. ஆ-க.

பாதிரிமரத்தின்பெயர்:—பாடலம்பாதிரி. ஆ-க.

முருக்கின்பெயர்:—கவிரேகிஞ்சுகம் - முருக்கெனக் கருதுவர். ஆ-உ.

தேற்றின்பெயர்:—இல்லந்தேறும். ஆ-க.

விளாவின்பெயர்:—வெள்ளில்விளாவாம். ஆ-க.

வில்வத்தின்பெயர்:—கூவிளம்வில்வம் - மாலூரங்கூவிளை. ஆ-ங.

வேங்கையின்பெயர்: — திமிசுந்திமிலும் - கணியும் வேங்கை. ஆ-ங.

கடம்பின்பெயர்:—கதம்பம்விசாலம்-நீபங்கடம்பே. ஆ-ங.

வெண்கடம்பின்பெயர்:—மாரவெண்கடம்பின்- பெயராகும்மே. ஆ-க.

பலாவின்பெயர்:—பனசம்வருக்கை-பலாவெனப்பகர்வர். ஆ-உ.

ஈரப்பலாவின்பெயர்:—ஆசினியீரப்-பலாவாகும்மே. ஆ-க.

அழிஞ்சிலின்பெயர்:—அழிஞ்சில்சேமாம் — அங்கோல மாகும். ஆ-உ.

மாதுளையின்பெயர்:—மாதுளங்கழுமுள்-மாதுளையாகும். ஆ-உ.
— தாடிமந்தாது - மாதுளை யென்ப.

ஆ-

எலுமிச்சையின்பெயர்:—சம்பீரமுருக்கு - எலுமிச்சை யாகும்

ஆ-உ.

நாரத்தையின்பெயர்:—நாரந்தநாரத்தை—ஆகுமென்ப. ஆ-ச.

குருக்கத்தியின்பெயர்: — குருகேமாதவி - குருக்கத்தி யாகும்.

ஆ-உ.

அகத்தியின்பெயர்:—அச்சங்கரீரம்-முநியேயகத்தி. ஆ-ங.

எருக்கின்பெயர்:—அருக்கமெருக்கே. ஆ-க.

களாவின்பெயர்:—களவுகளாவே. ஆ-க.

இலந்தையின்பெயர்:—இரத்திவதரி-இலந்தையாகும். ஆ-உ.

காயாவின்பெயர்:- காசைபூவை-காயாவாகும். ஆ-உ.

ஞாழலின்பெயர்:—நறவஞ்சுள்ளி-நாகஞாழல். ஆ-ங.

புன்கின்பெயர்:—நத்தமாலம்-புன்கெனநவில்வர். ஆ-க.

த்தின்பெயர்: — மாவந்துருக்கம் - குங்கும மாரும்.

ஆ-உ.

சதுரக்கள்ளியின்பெயர்:—வச்சிராங்கம்-கண்டீரவத்தொடு, வச்சிரஞ்சதுரக்-கள்ளிக்குவைப்பர். ஆ-ங.

அனிச்சத்தின்பெயர்:—நறவஞ்சுள்ளி-அருப்பலமனிச்சம். ஆ-உ.

தணக்கின்பெயர்:—நுணவுதணக்கே. ஆ-க.

ஓடையின்பெயர்:—உலவையோடை. ஆ-க.

ஒடுவின்பெயர்:—ஒடுவேபுடுப்பை. ஆ-க.

உழிஞ்சிலின்பெயர்:—உன்னமுழிஞ்சில். ஆ-க.

சேமரத்தின்பெயர்:—எகினஞ்சேமாம்—ஆண்மாமென்ப. ஆ-ங.

கமுகின்பெயர்—கந்திபூகம்-பூக்கங்கமுகே. ஆ-ங.

பனையின்பெயர்:—பெண்ணைதாலம்-புற்றாளிபோந்தையென், தெண்ணியநாமம்-பனையெனவிசைப்பர். ஆ-ச.

இளம்பனையின்பெயர்: — போந்தையிளம்பனை - ஆகவும் புகல்வர். ஆ-க.

தெங்கின்பெயர்:—நாளிகேரம்-இலாங்கலியேடகம், தாழைகேளி தெங்கெனச்சாற்றுவர். ஆ-உ.

மூங்கிலின்பெயர்:—காம்புதிகிரிகண் – வேழஞ்சந்தி, தூம்புமுளை வெதிர் - விண்டுவேரல், முந்தூழ்தட்டை - கீசகம்வேய்பணை, அம்பு வரைவேணு-கழையமையோங்கல், பாதிரிகிளையரி – பாண்டிலுள்பட, வருபவைமூங்கில்-எனவகுத்தனரே. ஆ-உரு.

கரும்பின்பெயர்:—கழைவேழமிக்கு-கன்னல்கரும்பே. ஆ-ச.

தாழையின்பெயர்:–கண்டல்கேதகை-மடிகைதைமுடங்கல், வண் டமர்தாழை - எனவகுத்தனரே. ஆ-ரு.

வாழையின்பெயர்:—கதலியுமரம்பையும்-வாழையாகும். ஆ-உ.

பூவாதுகாய்க்குமரத்தின்பெயர்:–கோளிபூவாது-காய்க்குங் குளிர் மரம். ஆ-க.

வண்டுணும்மலர்மரமாவன:— சண்பகமும்வேங்கையும்-வண்டுணு மலர்மரம். ஆ-உ.

மரப்பொதுப்பெயர்:—பாதவந்தாரு-தருவேதாவரம், ஒதியவிருக் கம்-மரப்பொதுப்பெயரே. ஆ-ரு.

மரச்செறிவின்பெயர்:—பொதும்பர்மரச்செறிவு. ஆ-க.

மரப்பொதும்பின்பெயர்:—கோடரம்பொதும்பே. ஆ-க.

நந்தனவனத்தின்பெயர்:— தேம்பொழின்மாக்கா–தோட்டந்துடவை, உய்யானஞ்சோலை - வனமுத்தியானம், தண்டலைகானம்-அடவி பதினொன்றும், நண்டியநந்தன-வனமெனவிசைப்பர். ஆ-கக.

காட்டின்பெயர்:-கடம்வியல்பழுவம்-நட்சிகுறும்பொறை, கடறு காந்தாரம்-அடவிகான்வனம், ககனம்காண்டம–கட்டமுளரி, சுரமத்த மாரணியம் - கானங்களரி, சிரணிபொச்சை - விடர்தில்லங்காடே.

இலையுதிர்ந்தமதுகாட்டின்பெயர்:—முதையலிலையுதிர்வு-பிறங்கிய முதுகாடே. ஆ-க.

கரிகாட்டின்பெயர்:— பொச்சையுஞ்சுரமும் – பொதிகரிகாடே. ஆ-உ.

காவற்காட்டின்பெயர்:— அரணிளைகாவல் - காடெனவறைவர். ஆ-உ.

ஒருமரமொருபெயர் உரைக்குங்கிளவி:—வரைவிலென்மனார்-வள் ளியோரே ஆ-உ.

தூற்றின்பெயர்:—இறும்பேமிடைதூறு. ஆ-க.

இண்டையின்பெயர்:—இண்டையீங்கை. ஆ-க.

முள்ளுடை மூலத்தின்பெயர்:—முண்டகமுள்ளுடை - மூலமென்ப. ஆூ-க.

முள்ளின்பெயர்: — கண்டகங்கடுவே - முள்ளெனக்கருதுவர். ஆூ-உ.

மரக்காழின்பெயர்:—ஆசினிகரியே - அரியேவைரம், சேகமரத்தின் - காழெனச்செப்புவர். ஆூ-ரு.

பிரம்பின்பெயர்:—வேத்திரஞ்சாதி - சூரல்பிரம்பே. ஆூ-ங.

ஆண்மரத்தின்பெயர்:—அகக்காழ்வன்மரம் - ஆண்மரமாகும். அவைகருங்காலி-முதலாயுள்ளன. ஆூ-உ.

பெண்மரத்தின்பெயர்: — புறக்காழ்வன்புல் - லெண்மரமாகும். அவைதாம், தெரிக்கிற்பனைகமுகு - தெங்குமூங்கில். ஆூ-உ.

அலிமரத்தின்பெயர்:—முருக்குநார்பால் - மரமுதலான, வேறலிமரமெனும் - விகற்பம்பெறுமே. ஆூ-க.

சிறிதூற்றின்பெயர்:—அறலேபதுக்கை-சிறுதூறுகும். ஆூ-உ.

மருந்தேனும்பெயர்:— புல்லுமரனும் - புதலும்பூடும், வல்லியும்பெயர்க்கொடை-மருந்தெனப்படுமே. ஆூ-ரு.

அத்திரசத்திரங்தைத்த புண்ணுற்று மருந்தின்பெயர்:—தைத்தவத்திரம்—சத்திரந்தணிக்கும், மெய்த்தகன்மருந்தே-சல்லியகரணி. ஆூ-க.

துணிபட்டவுறுப்பினைப் பொருத்துமருந்தின்பெயர்:—துண்டமானஉறுப்புத்துணிவினை, சந்திசெய்மருந்தே-சந்தானகரணி. ஆூ-க.

விரணந்தழும்புகளை நீக்குமருந்தின்பெயர்:—விரணமுந்தழும்பும்நீக்கிமெய்யினை, தகைமைசெய்மருந்தே-சமனியகரணி. ஆூ-க

உயிர்தருமருந்தின்பெயர்:—'உயிர்தருமருந்தே—மிருதசஞ்சீவனி. ஆூ-க.

மரமுதலிளமையின்பெயர்:—பிள்ளைகுழவி - கன்றுபோத்தென, கொள்பமரமுத-லிளமைப்பெயர்க்கொடை. ஆூ-ரு.

அவ்விளமைப்பெயர்க்குரியவல்லன:—நெல்லும்புல்லும் - நேராவப்பெயர். ஆூ-உ.

மரக்கொம்பின்பெயர்:—பொங்கர்கம்பு - சாகையுறுப்பு, கோடுபிறக்கம் - சினைபணையுலவை, கோடரம்விடபம் - தருமரக்கொம்பே. ஆூ-கஉ.

தழையின்பெயர்:—உலவைதழையே. ஆூ-க.

இளங்கொம்பின்பெயர்:—வளாரிளங்கொம்பே. ஆூ-க.

இலையின்பெயர்:—பத்திரமோலை—பாசடைதண்ணடை, சாகந்த மாலம் - தடைபாசிலையடை, பேசியபன்னம் - இலையெனப்படுமே. ஆ-௧௦.

தளிரின்பெயர்:—வல்லரிகுழைமுறி-மஞ்சரிகிலயம், பல்லவமலங் கல்-கிளைதளிராகும். ஆ-அ.

தளிர்த்தலின்பெயர்:—இலிர்த்தலுஞ்சிலிர்த்தலும்-குழைத்தலுந் தளிர்த்தல். ஆ-ரு.

அடிவெண்குருத்தின்பெயர்:—முருந்தேமுதலில் - செறிவெண் குருத்தே. ஆ-௧.

கொத்தின்பெயர்:—தொத்துமிணரும்-துணருமஞ்சரியும், கொத் தின்றொடர்ச்சியை-கூறுங்கிளவி. ஆ-௪.

பசுங்காயின்பெயர்:—பசுங்காய்தீயளி. ஆ-௧.

பழத்தின்பெயர்—பலங்கனிபழமே. ஆ-௨.

பாலினுட்படுகுருத்தியின்பெயர்:—பயினேபாலின்-உட்படுகுருத் தே. ஆ-௧.

வெட்டுக்குருத்தியின்பெயர்:—பிசினேயானி - வெட்டுக்குருதே. ஆ-௨.

நந்தியாவர்த்தத்தின்பெயர்:—வலம்புரி நந்தியா - வர்த்தமாகும். ஆ-௧.

கஞ்சாவின்பெயர்:—கஞ்சங்குல்லை-கஞ்சாவாகும். ஆ-௨.

நொச்சியின்பெயர்:—சிந்துவாரம்-நிர்க்குண்டிநொச்சி. ஆ-௨.

காந்தளின்பெயர்:—காந்தடோன்றி - பற்றைகோடலென், றுய் ந்தநான்கும்-காந்தளாகும். ஆ-௪.

செங்காந்தளின்பெயர்:—காந்தடோன்றி - பற்றைசெங்காந்தன். ஆ-ரு.

கோடையென்னும்பெயர்:—வெண்காந்தள்செங்காந்தள் - என் றிருவிகற்பமும், கொண்டேவழங்கும்-கோடைப்பெயரே. ஆ-௪.

ஊமத்தையின்பெயர்:—உன்மத்தமத்தம் - ஊமத்தைப்பெயரே. ஆ-௨.

ஆமணக்கின்பெயர்:—ஏரண்டமாமணக்கு. ஆ-௧.

குறிஞ்சியின்பெயர்:—கோரண்டங்குறிஞ்சி. ஆ-௧.

அலரியின்பெயர்:—கரவீரமலரி-கணவீரமுமாம். ஆ-௨.

வெட்சியின்பெயர்:—செச்சைசிந்தூரம்-வெட்சியாகும். ஆ-உ.

சிறுபீளையின்பெயர்:—உழிஞைசிறுபீளை - எனவுரைத்தனரே. ஆ-க.

பருத்தியின்பெயர்:—பரியேபன்னல்-கார்ப்பாசம்பருத்தி. ஆ-ந.

திப்பிலியின்பெயர்:— திப்பிலிகாமன்-சிறுமூலம்மே. ஆ-உ.

துளசியின்பெயர்:—துளசிதுல்லை-துளபம்வனந்துழாய். ஆ-ச.

மிளகின்பெயர்:—மரீசிகறியிவை-மிளகெனவைப்பர். ஆ-உ.

மஞ்சளின்பெயர்:—மஞ்சளரிசனம். ஆ-க.

கருணையின்பெயர்:—கந்தங்கருணை. ஆ-க.

சிறுகிழங்கின்பெயர்:—சூரசஞ்சிறுகிழங்-காகுமென்ப. ஆ-க.

வாசந்தருபலபண்டத்தின்பெயர்:— தகரந்தக்கோலம்-கோட்டஞ் சாதிக்கா, இருவங்கமாஞ்சி - கச்சோலமேலமென, பகரும்வாசந்தரு-பண்டப்பெயரே. ஆ-அ.

வெட்டிவேரின்பெயர்:—மூலகந்தம் - பீதகத்தோடு, வேரியிரு வேலி-வெட்டிவேரென்ப. ஆ-ச.

இலாமிச்சையின்பெயர்:—வேர்வாசமிலா – மிச்சைமேலாகும். ஆ-க.

கடுகின்பெயர்:—கடிப்பகையையவி-கடுகின்பெயரே. ஆ-உ.

கோத்துமலியின்பெயர்:—உருளரிசிகொத்து - மலியெனவுரைப் பர். ஆ-க.

கழங்கு-அல்லது கழற்காயின்பெயர்:—கழங்கேழுழல். ஆ-க.

கழங்கின்கொடியின்பெயர்:—கொடிக்கழலாகும். ஆ-க.

கிலுகிலுப்பையின்பெயர்:—பகன்றைகிலுகிலுப்பை. ஆ-க.

சேம்பின்பெயர்:—சகுடஞ்சேம்பே. ஆ-க.

சிறுகீரையின்பெயர்:—சில்லிசாகினி-சிறுகீரைப்பெயரே. ஆ-உ.

கோத்தான்பெயர்:—நந்தைகொத்தான்-நாந்தையுமாகும். ஆ-உ.

பாற்சோற்றியின்பெயர்:—பாயசம்பாற்சொற்றி - பனசமுமாகும். ஆ-உ.

குன்றியின்பெயர்:—குருவிந்தங்குஞ்சம்-குன்றிப்பெயரே. ஆ-உ.

கோளிஞ்சியின்பெயர்:—கோளிகொளிஞ்சி. ஆ-க.

நாயுரீஇயின்பெயர்:—காமஞ்சரி-நாயுரிஇயென்ப. ஆ-க.

இஞ்சியின்பெயர்:—இஞ்சிசிருங்கபேரம்-பல்லமென்ப. ஆூ-௨.

கற்றாழையின்பெயர்:—குமரிகற்றாழை-ஆகக்கூறுவர். ஆூ-க.

வழுதலையின்பெயர்:—வங்கம்பிருகதி-வழுதுணை வழுதலை. ஆூ-ங.

மலைச்சாரல்விளை நெல்லின்பெயர்:—ஐவனமலைச்சாரல்-விளைநெல்லாகும். ஆூ-க.

குளநெல்லின்பெயர்:—நீவாரங்குளநெல். ஆூ-க.

செய்ந்நெல்லின்பெயர்:—சாலிசெய்ந்நெல்லே. ஆூ-க.

செந்நெல்லின்பெயர்:—செந்நெல்விரீகி-செஞ்சாலியாகும். ஆூ-௨.

போரின்பெயர்:—சும்மைகுவால்போர். ஆூ-௨.

அரிசியின்பெயர்:—அரியேதண்டுலம்-அரிசியாகும். ஆூ-௨.

வேயரிசியின்பெயர்:—இயவைதோரை-எனும்வேயரிசி. ஆூ-௨.

சோளத்தின்பெயர்:—சொன்னலுமிறுங்கும்-சோளமாகும். ஆூ-௨.

கருந்தினையின்பெயர்:—இறடிகருந்தினை. ஆூ-க.

செந்தினையின்பெயர்:—ஏனல்செந்தினை. ஆூ-க.

உழுந்தின்பெயர்:—மாடமுழுந்தே. ஆூ-க.

துவரையின்பெயர்:—ஆடகந்துவரை. ஆூ-க.

காராமணியின்பெயர்:—கூலமிதைகா-ராமணிக்கூற்றும். ஆூ-௨.

கடலையின்பெயர்:—மஞ்சூரங்கடலை. ஆூ-க.

பயற்றின்பெயர்:—முதற்கம்பயறே. ஆூ-க.

கம்பின்பெயர்:—கவலைபுல்செந்தினை-கம்பாகும்மே. ஆூ-ங.

கோதுமையின்பெயர்:—கோதிகோதுமை. ஆூ-க.

கொள்ளின்பெயர்:—குலுத்தங்காணம்-கொள்ளாகும்மே. ஆூ-௨.

வரகின்பெயர்:—வாருகோத்திரவம். ஆூ-௨.

அவரைதுவரைமுதலாயினவற்றின்பெயர்:—முதிரையவரை-துவரைமுதலாயின. ஆூ-க.

விதையின்பெயர்:—பால்நாழ்பீசம்-வித்துவிதையாம். ஆூ-ச.

எள்ளின்பெயர்:—எண்ணுந்திலமும்-என்னௌனவிசைப்பர். ஆூ-௨.

எள்ளிளங்காயின்பெயர்:—கவ்வையெள்ளிளம் - காயாகும்மே. ஆூ-க.

கதிரின்பெயர்:—குரல்கதிராகும். ஆூ-க.

பதரின்பெயர்:—பதடிபதரே. ஆூ-க.

தினைத்தாளின்பெயர்: — இருவியுமருவியும் - தினைத்தாளாகும். ஆூ-உ.

வைக்கோலின்பெயர்:—வையேபலாலம்-வைக்கோலாகும், வழுதுமொரோவழி-வையும்பெறுமே. ஆூ-ஙு.

தூற்றுநெற்கூட்டின்பெயர்:—பொங்கழிதூற்று - நெற்கூடாகும். ஆூ-உ.

பயிரின்பெயர்:—பயிரேபசும்புல்-பைங்கூழாகும். ஆூ-உ.

புற்பிறப்பின்பெயர்:—புதல்புல்லென்பன-புற்பிறப்பாகும். ஆூ-உ.

பச்சருகின்பெயர்:—பதமுந்தூர்வையும்-பச்சறுகாகும். ஆூ-உ.

இளம்புல்லின்பெயர்:—சட்டமிளம்புல். ஆூ-க.

தெங்கினுர்பாளையின்பெயர்:—நாரிநெய்பரி - தெங்கினுர்ப்பாளை. ஆூ-உ.

கிழங்கின்பெயர்:—மூலங்கந்தம்-கிழங்கெனமொழிப. ஆூ-உ.

கோற்கொடியின்பெயர்: — இலதையெனும்பெயர் – கோற்கொடிக்கெய்தும். ஆூ-க.

கொடிப்பிறப்பின்பெயர்:—கோடிகொடியென்ப–கொடியின் பிறப்பே. ஆூ-க.

கற்பஞ்சேர்கொடியின்பெயர்:—கற்பகஞ்சேர்கொடி - காமவல்லி ஆூ

கொடியின்பெயர்:—வல்லியுநூழிலும் - வள்ளியுங்கொடியே. ஆூ-ஙு.

மல்லிகையின்பெயர்:—மல்லிகைமௌவல். ஆூ-க.

இருவாட்சியின்பெயர்:—மயிலையிருவாட்சி. ஆூ-க.

முல்லையின்பெயர்:—மௌவலுந்தளவமும்-கற்புமுல்லை.ஆூ-ஙு.

சிருசண்பகத்தின்பெயர்:—பித்திகைசாதி-கருமுகைமாலதி. ஒத்தசிறுசண்-பகமாகும்மே. ஆூ-ச.

மௌவலின்பெயர்:—மாலதிமௌவல்-ஆகுமென்ப. ஆூ-க.

மருக்கொழுந்தின்பெயர்:—தமனமருக்கொழுந்து. ஆூ-க.

கூதாளியின்பெயர்:—துடிகூதாளம்-கூதாளியென்ப. ஆூ-உ.

கோவ்வையின்பெயர்:—விம்பமுர்தொண்டையும் - கொவ்வைபெயரே. ஆூ-உ.

வள்ளையின்பெயர்:—வள்ளைகாளிகம். ஆூ-க.

காக்கணத்தின்பெயர்: — தன்னிகிகினி - கருவிளைகாக்கணம். ஆ-௩.

முந்திரிகையின்பெயர்: — மதுரசங்கோத்தரிகை - முந்திரிகையாகும். ஆ-௨.

மலைப்பச்சையின்பெயர்:—குளவிமலைப்பச்சை. ஆ-க.

இசங்கின்பெயர்:—குண்டலிமுத்தாபலம் - இசங்கெனக்கூறுவர். ஆ-௨.

வேரின்பெயர்:—சடைதூர்-சிவைவேர். ஆ-௩.

அடம்பின்பெயர்:—அடம்புசோபாலிகை. ஆ-க.

விரிதூற்றின்பெயர்:—அடம்புசோபாலிகை. ஆ-க.

பீர்க்கின்பெயர்:—பீரம்பீர்க்கு. ஆ-க.

பெம்பீர்க்கின்பெயர்:—பெரும்பீர்க்குப்படலிகை. ஆ-க.

பாகலின்பெயர்:—கூலம்பாகல். ஆ-க.

சிவேதையின்பெயர்:—சிவேதைபகன்றை. ஆ-க.

சீந்திலின்பெயர்:—அமுதவல்லிசீந்தில். ஆ-க.

காஞ்சோறியின்பெயர்:—கண்டூரங்காஞ்சொறி. ஆ-க.

தாளியின்பெயர்:—பஞ்சிகந்தாளி. ஆ-க.

நறையாலியின்பெயர்:— பகன்றை நறையால் - என்னப்பகர்வர். ஆ-௧.

வெற்றிலையின்பெயர்:—நாகவல்லி-தாம்பூலம்வெற்றிலை. ஆ-௨.

பிரண்டையின்பெயர்:—வச்சிரவல்லி பிரண்டையாகும். ஆ-க.

அவுரியின்பெயர்:—நீலியவுரி. ஆ-க.

குயிஞ்சியின்பெயர்:—குறிஞ்சிசகசரி. ஆ.

தும்பையின்பெயர்: — துரோணந்தும்பை - ஆகச்சொல்லுவர். ஆ-க.

தருப்பையின் பெயர்:—குசையேதருப்பை — என்னக்கூறுவர். ஆ-க.

பஞ்சாய்க்கோரையின்பெயர்:— எருவைபஞ்சாய்க் - கோரையென்ப. ஆ-க.

வாட்கோரையின்பெயர்:—செருஞ்சிவாட்கோரை. ஆ-க.

நாணலின்பெயர்:—காசைநாணல். ஆ-க.

விழற்புல்லின்பெயர்:—விரணம்விழற்புல். ஆ-க.

சுரையின்பெயர்:—அலாபுதும்பை-சுரையெனப்புகல்வர். ஆ-௨.

நீர்முள்ளியின்பெயர்:—நீர்முள்ளிமுண்டகம்-ஆகுமென்ப. ஆ-க.

பாசியின்பெயர்:— நாரஞ்செவிரம் - பதியஞ்சைவலம், பாசியெ ன்று - பகரப்படுமே. ஆ-ரு.

நீர்க்குளிரியின்பெயர்:—கல்லாகாரம்-நீர்க்குளிரியென்ப. ஆ-க.

தாமரையின்பெயர்:—புண்டரீகம்பதுமம் - நளினஞ்சரோருகம், முண்டகமம்போ - ருகமரவிந்தம், பங்கயமம்புயம் - வாரிசஞ்சலசம், கஞ்சம்வனகம் - கோகனகங்கமலம், முளரிநீரோருகம்-திருமால்கொப் பூழ், திருமலரிண்டை-சதபத்திரியென, வருபவைதாமரை-வண்பெய ராகும். ஆ-உக.

தாமரைக்காயின்பெயர்:—வராடகந்தாமரைக்-காயெனவகுப்பர். ஆ-க.

தாமரைச்சுருளின்பெயர்:—சுருள்பீசம்வளையம். ஆ-உ.

குவளைப்பொதுப்பெயர்:— உற்பலங் குவலயம் – கழுநீர்குவளை. ஆ-ஙா.

* கருங்குவளையின்பெயர்:—நீலோற்பலமிந் - தீவரங்குவலயம், நீலம்பானல்–காவிகருங்குவளை, கல்லாரமுமென-கழறலாகும். ஆ-எ.

செங்குவளையின்பெயர்:—செங்குவளையரத்தம் - உற்பலஞ் செங் கழுநீர். ஆ-ஙா.

குவலயமெனும்பெயர்:–குவலயநெய்தல்-ஆகவுங்கூறுவர். ஆ-க.

செவ்வாம்பலின்பெயர்:— கைரவஞ்செவ்வல்லி - செவ்வாம்பலா கும. ஆ-உ.

குமுதமென்னும்பெயர்:—வெள்ளாம்பல்சேதாம்பல் - என்றிரு விகற்பமும், கொள்பமன்னோ-குமுதப்பெயர்க்கொடை. ஆ-உ.

குமுதத்தின்பெயர்:— ஆம்பலு நெய்தலும் - அல்லியுங்குமுதம். ஆ-ஙா.

அகவிதழின்பெயர்:—அல்லியகவிதழ், ஆ-க.

புறவிதழின்பெயர்:—புல்லிபுறவிதழ். ஆ-க.

பூவினுட்கோடையின்பெயர்:—பொகுட்டேகன்னிகை-பீலினுட கொட்டை. ஆ-உ.

---

* பிங்கலந்தை முதலியவற்றிற் கருங்குவளையைக் கருநெய்தலெ னவும், குமுதத்தை வெண்ணெய்தலெனவுங் கூறுவர்.

ன்வகையாவன:—கோட்டுப்பூ கொடிப்பூ - நீர்ப்பூ நிலப்பூ, டய – பூவின்றொடர்பே. ஆ-௪.

மொட்டின்பெயர்:— முகைநனை கலிகை - முகிழ்சினைகோரகம், * நகையொடுகன்னிகை - போகில்மொட்டே. ஆ-௬.

பூவின்பெயர்:— அலர்தாரலரி - போதுசுமம் குசுமம், மலரோ டிணர்வீ-மலர்ந்தபூவே. ஆ-௬.

பூங்கொத்தின்பெயர்:—துணரே மஞ்சரி-வல்லரிதொத்தோ,டிண ரேகுலையிவை - பூங்கொத்தென்ப. ஆ-௬.

பழம்பூவின்பெயர்:—செம்மல்பழம்பூ-ஆகச்செப்புவர். ஆ-௧.

மலர்த்தாதின்பெயர்:—.மகரந்தங்கேசரம்-கொங்குமலர்த்தாதே. ஆ-௩.

பூவிதழின்பெயர்:—ஏடுந்தோடும்-பூவினிதழே. ஆ-௨.

மாலையின்பெயர்:— தொடையல்வாசிகை - சிகழிகைகோதை, படலையலங்கல் - கத்திகைபிணையல், அணியல் சுருக்கை - தொடலை தாமம், தொங்கறெரியல் – கண்ணிதார்சூட்டு, மஞ்சரியொலியல்-இல ம்பகமாலே. ஆ-௨0.

பின்னியமாலையின்பெயர்:—பிணையல் பின்னிய-மாலைப்பெயரே. ஆ-௧.

நுதலணிமாலையின்பெயர்:— சூட்டுடனிலம்பகம்-நுதலணிமாலை. ஆ-௨.

வாசிகையின்பெயர்:—மாலைசிகழிகை-வாசிகைதொடையல்,ஆகு மென்ப-அறிந்திசினோரே. ஆ-௪.

நாடே பிறர் நாட்டிற் குவமைபாறே
காலம் அறிந்துதவுங் காவிரிதானே
ஆடவர் திலகன் அம்பன் மன்னன்
ஈடிசைத் தலைவன் அருவந்தைச் சேந்தன்
ஆய்ந்த திவாகரத் தரும்பொருள் விளங்கும்

நான்காவது
மரப்பெயர்த்தொகுதி
முற்றிற்று.

* நகையென்பது-அடைமொழியெனக் கொளினு மமையும்.

கடவுள் துணை.

# ஐந்தாவது இடப்பெயர்த்தொகுதி.

## மூலபாடம்.

மோக்கத்தின்பெயர்---அமுதங்கேவலம்-அபவருக்கம்வீடு,சிவங் கைவல்லியம்-சித்திமீளாக்கதி, பரகதியோடு-முத்திபஞ்சமகதி, நிர்வாணமோக்கம்-எனநிகழ்த்தினரே. ஆ-௧௨.

தெய்வலோகத்தின்பெயர்:— தானந்துறக்கம்-பொன்னுலகும்பர், வானகமமருல - குயர்நிலைபுத்தேள், வியனுலகுவிசும்பு - விண்ணுலகு நாகம்,பவனமாசுவர்க்கம் - தெய்வலோகப்பெயரே. ஆ-௧௬.

நாகலோகத்தின்பெயர்:—பவன்நாக-லோகம்பாதலம். ஆ-௩.

விஞ்சையருலகத்தின்பெயர்:—சேணிபுஞ்சேடியும் – விஞ்சையர் சேரிடம். ஆ-௨.

திசையின்பெயர்:—மாதிரமாசை - அம்பறிசைப்பெயர், மற்றுந் திசையின்-பெயர்க்ககுபம்திகை, விசும்புலகங்கோ-காட்டையுமாகும். ஆ-௯.

கீழ்த்திசையின்பெயர்:—குணக்கேபூருவம்-இந்திரியிராசி, கிழக்குக்கீழ்த்திசை-கிளக்குங்காலே. ஆ-௫.

தெற்கின்பெயர்:—அவாசிதக்கணம் - யாமியந்தெக்கு, சிவேதை மற்றிவை - தெற்கெனலாகும். ஆ-௫.

மேற்கின்பெயர்:—மேற்குப்பச்சிமம்—குடக்கிவைமேற்கே, வாருணம்பிரத்தி—தியக்குமதுவே. ஆ-௫.

வடக்கின்பெயர்:—உதக்கேஉதீசி - உத்தரமென்ன - வடக்கின் பெயரிவை - வைக்குங்காலே. ஆ-௩.

பூமியின்பெயர்:-அவனிகாசினி-மேதினியளக்கர், தரணிதாரணி-தாரதலங்குவலயம், புடவிபூதலம்—தரைபடிஞாலம், வையமகிலங்கு - மண்புவிபார் * நா, டுலகுபுவனி-பாரியுகநேமி, அகலிடம்பொறைமகி-மண்டிலம்பூத்திணை, தலம்பொழில்பிருதிவி - வேலாலவலயம், நிலஞ் சகந்தாலம்-பூமியென நிகழ்த்தினர். ஆ-௩௮.

---

* நாடு-நடுவெனவும் பாடம்.

நாகத்தின்பெயர்:—நிரயந்துவாந்தம் - பாதாளங்கும்பி, அள்ளலளறே - அருஞ்சிறையிருணிலம், எரியுந்திமிரமும் - இரௌரவமென்றிவை, நரகின்பெயரென-நவிலப்படுமே. ஆ௳-௧௧.

உலகின்பொதுப்பெயர்:—புவனநாடு - பொழிறலம்புடவி, புவனமுலகின்-பொதுப்பெயர்பால. ஆ௳-௬.

நாட்டின்பெயர்:—வைதிரமண்டிலம்-பாண்டிதேயம், தண்ணடைசனபதம் - அகலுள்சும்மை, தண்டமேணிபுல - மென்றிவைநாடே. ஆ௳-௧௧.

மலையின்பெயர்:—விலங்கலடுக்கல் - வெற்புப்பருப்பதம், சிலம்புநாகம் - குறும்பொறைசிகரம், வேதண்டம்வீரம் — கிரிகிகிரிசையம், தாரணிபூதரம் - ஓங்கல்பிறங்கல், குவடு குன்றோதி - பறம்புவரைவிண்டு, போதிகோச்சிலை - இறும்புதடமாதிரம், பொச்சை கல்கல்லகம் - பொருப்புநகமசலம், சாரல்சிலோச்சயம் - சைலமலை யென்ப. ஆ௳-௩௰௮.

மேருவின்பெயர்:—ஏமகூடம் - பரிசன்னியம்பீதரம், மணிமலைபொன்மலை-மகமேருவென்ப. ஆ௳-௬.

வெள்ளிமலையின்பெயர்:—வெண்மலைவேதண் - டம்விசயார்த்தம், கயிலையும்வெள்ளி-மலையெனப்படுமே. ஆ௳-௪.

பொதியமலையின்பெயர்:—தென்மலைமலையம்- பொதியமலையென்ப. ஆ௳-௨.

கொல்லிமலையின்பெயர்:—வல்லியம்பொருப்பே - கொல்லிமலையாகும். ஆ௳-௨.

குன்றின்பெயர்:—இறும்புபொச்சை-குவடுபதலை, பிறங்கல்பொற்றை-குறும்பொறைகுன்றே. ஆ௳-௭.

மலையுச்சியின்பெயர்:—கோடுகொடிமுடி - குவடுசிக்ரம் - சிமையமைந்தும்-மலையினுச்சி. ஆ௳-௫.

மலைப்பக்கத்தின்பெயர்:—வாரமுந்தடமும் - சாரலுமலைப்பக்கம். ஆ௳-௩.

பாறையின்பெயர்:—அறையேபாறை. ஆ௳-௧.

துறகல்லின்பெயர்:—பொறையேதுறுகல் ஆ௳-௧.

மலைமுழையின்பெயர்:—முடுக்கர்கந்தரம் – மலைமுழை யென்ப. ஆ௳-௨.

கீழறையின்பெயர்:—பிலமேகீழறை. ஆ௳-௧.

குகையின்பெயர்:—நிகுஞ்சங்குகையாம். ஆ-க.

கற்புழையின்பெயர்:—கண்டறைகற்புழை - என்னப்படுமே. கற்பாழிகாண்டையும்-கருதுவரதற்கே. ஆ-௩.

கல்லின்பெயர்:—சிலேயேகல்லே. ஆ-க.

திறள்கல்லின்பெயர்:—உலமேதிரள்கல். ஆ-க.

நுழைவாயிலின்பெயர்:—நூழையுஞ்சுருங்கையும்-நுழைவாயிலாகும். ஆ-உ.

மலைபிளப்பின்பெயர்: — விடர்மலைப் பிளப்பென - விளம்பினர் புலவர். ஆ-க.

வெடிப்பின்பெயர்: — விடருங்கமரும் - வெடிப்பின் பெயரே. ஆ-உ.

திடரின்பெயர்:—திட்டைதிடரே. ஆ-க.

சிறுதிட்டையின்பெயர்:—பதுகைசிறுதிட்டை. ஆ-க.

பரலடுத்துயர்நிலத்தின்பெயர்:—பரலடுத்துயர்நிலம் - முரம்பெனப்படுமே. ஆ-க.

மேட்டின்பெயர்: — திட்டைதிடறு - சுவல்வல்லை வன்பால், மெட்டுத்திடர்படர்-குப்பல்குவால்குவை, ஒட்டியபதினொன்றும்- மேடெனவுரைப்பர். ஆ-கக.

பாதாளத்தின்பெயர்:—அரம்பிலம்பாதலம் - பாதாளப் பெயரே. ஆ-உ.

கடலின்பெயர்:—அத்திபௌவம் – அளக்கரார்கலி, ஆழிபெருநீர் - அம்பரமுந்நீர், உப்புநீரை - சக்கரஞ்சாகரம், வேலைவெள்ளம் மகராலயநேமி, சலநிதிவாரி-சலதியலையே, பாராவாரவம்- உததிசமுத்திரம், பரவைபுவர்கலை – புணரிவாரிதி, வேலாவலயம் - கார்கோளோதம், வாருணஞ்சிந்து - வாரமம்புராசி, கார்மலியுவரி–கடலெனக் கருதுவர். ஆ-௩௬.

கடற்றிரையின்பெயர்:—ஓதமும்புணரியும் - கடற்றிரை யாகும். ஆ-உ.

புனற்றிரைப்பொதுப்பெயர்:—சீகரந்தரங்கம் - அறல்கல்லோலம், அலைபுனற்றிரைக்கு-வரும்பொதுப்பெயரே. ஆ-ரு.

கடற்கரையின்பெயர்: — வேலையும்பாரா - வாரமுங்கடற்கரை. ஆ-உ.

புனற்கரைப்பொதுப்பெயர்:—தீரம்பாரம்-வரையணைகோடு, கூலம் வாரம்-புனற்கரைப்பொதுப்பெயர். ஆடூ-எ.

செய்கரையின்பெயர்:—குலையுஞ்சேதுவும் - குரம்புஞ்செய்கரை. ஆடூ-ரு.

மலைசாரல்வரும் யாற்றின்பெயர்:—அருவிமலைச்சா-ரல்வரும் யாறும். ஆடூ-க.

முல்லைக்கான்யாற்றின்பெயர்:—கலுழியுமுயவையும் - முல்லைக் கான்யாறு. ஆடூ-உ.

ஆற்றின் பொதுப்பெயர்:—உந்திநதி துறை - வருபுனல் குடிஞை, சிந்துவோடொலியல் - ஆறெனச்செப்புவர். ஆடூ-எ.

கழியின்பெயர்:—கானன்முரம்பு - கழியின்பெயரே. ஆடூ-உ.

கழிமுகத்தின்பெயர்:— அதோமுகம்புகாரோ - டருவிகூடல், கழிமுகமென்று - கருதல்வேண்டும். ஆடூ-ரு

உப்பளத்தின்பெயர்:—உப்பளங்காயல் - உவளகமளக்கர். ஆடூ-ரு.

காவிரியின்பெயர்:—பொன்னிகாவிரி. ஆடூ-க.

பொருநையின்பெயர்:—பொருநைதண்பொருந்தம். ஆடூ-க.

கன்னியின்பெயர்:—குமரிகன்னி - ஆகக்கூறுவர். ஆடூ-க.

வையையின்பெயர்:—வேகவதியே - வையையாகும். ஆடூ-க.

ஆன்பொருந்நதியின்பெயர்:—ஆனிவான்யான் - பொருந்தமாகும். ஆடூ-க.

கௌதமைநதியின்பெயர்:—கோதைகௌதமை - ஆகக்கொள்ளுவர். ஆடூ-க.

கோதாவிரின்பெயர்—விருத்தகங்கை - விமலைகோதாவிரி. ஆடூ-உ.

பால்யாற்றின்பெயர்:—பாலிகீரநதி - பால்யாறுகும். ஆடூ-உ.

வாவியின்பெயர்:—அலர்தைபண்ணை - கோட்டங்கிடங்கோ, டிலஞ்சிதாங்கல் - சுனையேல்வையோடை, வட்டந்தடாகம் - மடுக்குளம் வலயம், குட்டங்குண்டம் - பட்டஞ்சூழி, பொய்கைகேணி - ஆவிதடம்படுசர், ஏரிகயம்பயம் - உவளகம்வாவி. ஆடூ உஎ.

எந்ததிரவாவியின்பெயர்:—இலவந்திகையே-எந்திரவாவி. ஆடூ-க.

ஆற்றிடைக்குறையின்பெயர்:— இலங்கையுந்துருத்தியும் - என் வரும்பெயரோ, டரங்கமுமாற்றிடைக்-குறையெனவறைவர். ஆடூ-ரு.

ஊருணுநீர்ப்பெயர்:—ஊருணும்பொதுநீர்-ஊருணியாகும். ஆடூ-க.

கிணற்றியின்பெயர்:—கூவலுமகம்பும் - கூபமுங்குழியும், பூவலுங் கேணியும் — துரவுங்கிணறே. ஆ-எ.

ஊறலின்பெயர்:—அஃகுமுறவியும் — அகம்புமூறல். ஆ-ரு.

நீர்க்குமிழியின்பெயர்:—புற்புதமொக்குள் - பௌவநீர்க்குமிழி ஆ-ரு.

நுரையின்பெயர்:—நுரையேபேனம் - ஆமுமென்ப. ஆ-க.

ஆழத்தின்பெயர்:—அழுந்துங்குண்டும் - கயமுமாழம். ஆ-ரு.

நிறைபுனலின்பெயர்:— வழாறும்பிராறும் - வாயுநிறைபுனல். ஆ-உ.

நீந்துபுனலின்பெயர்:—அகாதமென்பது-நீந்துபுனலாகும். ஆ-க.

கொழுந்துநீரோட்டத்தின்பெயர்:—கோலமென்பது - கொழுந்து நீரோட்டம். ஆ-க.

தெளிநீரின்பெயர்:—சற்சலமென்பது - தெளிநீராகும். ஆ-க.

கலங்கற்புனலின்பெயர்:— விலங்கல்கலுழி - கலங்கற்புனலே, ஆ-உ.

சேற்றியின்பெயர்:—அள்ளற்சகதி-அளக்காசறு, கொள்ளமளறு-குழம்புகாலாழ், தொள்ளிபங்கம் - பூழிகுழைசேறே. தொய்யறுளி யே - செதும்புசேதகம், செய்யலென்றிவையும் - சேறெனத்தருமே. ஆ-கஎ.

வழுக்குநிலத்தின்பெயர்: — அருப்பமுமழுவும் - வழுக்குஜல மென்ப. ஆ-உ.

பொல்லாநிலத்தின்பெயர்:—அசும்பும்செதும்பும் - அயதுமென் றிவற்றோ, டங்கணமுஞ்சகதியும் - பொல்லாநிலமே. ஆ-ரு.

வெண்மணலின்பெயர்:—வாலுகம்வெண்மணல். ஆ-க.

மணற்குன்றின்பெயர்:—புளினமணற்குன்றே. ஆ-க.

நுண்மணலின்பெயர்:—அதாயிர்நுண்மணல். ஆ-உ.

புழுதியின்பெயர்:—பொடிபூழ்திபுழுதி - ஆகுமென்ப. ஆ-உ.

அலைகொழுத்தகருநுண்மணலின்பெயர்:— அறலேயலைநுண்கரு மணலாகும். ஆ-க.

ஐந்திணையாவன:— மலைச்சார்புகுறிஞ்சிநிலம்-தடற்சார்புநெய்த நிலம், காடுசார்நிலமுல்லை-நாடுசார்நிலமருதம், நீரின்றிவேனிற்றேர்நில ம்பாலை. ஆ-ரு.

மருதநிலத்தின்பெயர்:— அகணிபணைபண்ணை - பழனங்கழனி பானல்கம்பலை - படுகர்வயன்மருதம். ஆ-௬.

முல்லைநிலத்தின்பெயர்:—புறவம்புறம்பணை - முல்லைநிலப் பெயர். ஆ-௨.

குறிஞ்சிநிலத்தின்பெயர்:—அறைவர்குறிஞ்சிக்கும் - அப்பெயர் தானே. ஆ-௧.

வன்பாலெனும்பெயர்:— வன்பால்குறிஞ்சியும் - பாலையுமாகும். ஆ-௧.

மென்பாலெனும்பெயர்:—மென்பாலென்பது - மருதமேற்றே. ஆ-௧.

சமப்பாலெனும்பெயர்:—முல்லையுநெய்தலும் - மொழிசமப்பாலே. ஆ-௧.

கருநிலமென்பது-மலையினீரில்-வனத்தில்வந்நமற், றிணையபயன்படா - மிகுதிகருநிலம்.

துருக்கத்தின்பெயர்:—அழுவந்துருக்கம் - ஆகுமென்ப. ஆ-௧.

ஊரின்பெயர்:—பாக்கம்பட்டினம் — பதிநகர்சும்மை, பூக்கஞ்சேரி — புரமுட்டம்பூண்டி; அகரங்குடியே - குறிச்சிகோசரம், அகலுள்ஞெச்சி - இருக்கைவேலி, குப்பம்பாடி - குறும்புபாழி, சிறுகுடிதண்ணடை - உறையுளெயிலொடு, வாழ்க்கையுட்படுத் - திருபத்தேழுங், நாடிலூரென — நவின்றிசிஞேரே. ஆ-உ௭.

நீரும்வயலுஞ்சூழ்ந்தவூரின்பெயர்:— சுரந்தநீரும்-வயலுஞ்சூழ்ந்தவூர், கிராமமாக - கிளக்கப்படுமே. ஆ-௧.

ஐஞ்ஞூறுகுடிநிறைந்தவூரின்பெயர்:—குடியைஞ்ஞூறுக்கு-குறைவறநிறைந்தது, பெருங்கிராமமென - பேசப்படுமே. ஆ-௧.

மலைசூழ்ந்தவூரின்பெயர்:— கிரிபலசூழ — அடுத்தவூர்கேடகம், ஆ-௧.

மலையுமாறுஞ்சூழ்ந்த வூரின்பெயர்:— மலையுமாறும் — அடுத்தவூர் கர்வடம். ஆ-௧.

பலபண்டம்பகருங் கடற்கரையூரின்பெயர்:— பண்டம்பலகொடு பகருங்கடற்கரை, மன்னும்பதியே - பட்டினமாகும். ஆ-௧.

சிற்றூரின்பெயர்:—பட்டுநொச்சியும்—பள்ளியுஞ்சிற்றூர். ஆ-௨,

குறிஞ்சிநிலத்தூரின்பெயர்:—குறிச்சிசீறூர் — குறிஞ்சிநிலத்தூர். ஆ-௨

முல்லைநிலத்தூரின்பெயர்:—பாடிமுல்லைப்பதி. ஆ-௧.

நெய்தனிலத்தூரின்பெயர்:— பட்டினநெய்தல் - பதியெனப்படுமே. ஆ-க.

பாலைநிலத்தூரின்பெயர்: — முனையிடங்குறும்பு - முதுபாலைநிலத்தூர். ஆ-உ.

மருதநிலத்தூரின்பெயர்:—பூக்கங்கொடிக்காடு - பூரியமுறையுள், பாக்கமருப்பம்-அகலுள்பதியே, கோட்டம்வசதி-தாவளநியமம், வாழ்க்கைதண்ணடை—மருதநிலத்தூர்ப்பெயர். ஆ-கச.

நகரப்பதியின்பெயர்:—பாடியும்புரமும்-நகரப்பதியே. ஆ-உ.

சூழ்கழியிருக்கையின்பெயர்:—சூழ்கழியிருக்கை-கோணமுகமே ஆ-க.

மருங்கிலூர்சூழ்பெரும்பதியின்பெயர்:—மருங்கிலூர்சூழ்—பெரும்பதிமடப்பம். ஆ-க.

கொடுங்குறும் பரணிருக்கையின்பெயர்:—கொடுகுறும்பரணிருக்கை-குறும்பென்றாகும். ஆ-க.

முனைமேற்சென்றேருறைபதியின்பெயர்: — பாசறைமுனைமேற்-சென்றேருறைபதி. ஆ-க.

உறையூரின்பெயர்:—கோழியுறையூர். ஆ-க.

மதுரையின்பெயர்:—கூடன்மதுரை. ஆ—க.

சிதம்பரத்தின்பெயர்:—மன்றஞ்சிதம்பரம். ஆ-க.

திருவாரூரின்பெயர்:—கமலைதிருவாரூர். ஆ-க.

கருவூரின்பெயர்:—கருவூர்வஞ்சி. ஆ-க.

காவிரிப்பூம்பட்டினத்தின்பெயர்: — காகந்திபுகார் - காவிரிப்பூம்பட்டினம். ஆ-உ.

அவந்தியின்பெயர்:—உஞ்சையவந்தி. ஆ-க.

காசியின்பெயர்:—காசிவாரணசி. ஆ-க.

காஞ்சியின்பெயர்:—கச்சிகாஞ்சி. ஆ-க.

மிதிலையின்பெயர்:—விதேகையென்ப-மிதிலையாகும். ஆ-க.

அயோத்தியின்பெயர்:—விநிதைசாகேதம் - கோசலையயோத்தி. ஆ—ங.

புரியெனும்பெயர்:—புரியென்கிளவி-புரமென்றாகும். ஆ-க.

பாடியெனும்பெயர்:—பாடியென்பது-சேரியாகும். ஆ-க.

கடாரத்தின்பெயர்;—காழகங்கடாரம்—ஆகக்கருதுவர். ஆ—க.

சிங்களத்தின்பெயர்:—சிங்களமீளம்-ஆகச்செப்புவர். ஆ-க.

நெல்லும்புல்லுநிறைந்த மலையூரின்பெயர்: — நெல்லும்புல்லும் - நிறைந்தமத்தகம், புல்லுமலையூர்-சம்வாகமாகும். ஆ-க.

அரித்துவாரத்தின்பெயர்:—அரித்துவாரம்-மாயாபுரியாம்-ஆ-க.

கடையின்பெயர்:—கூலமங்காடி-கடையாகக்கூறுவர். ஆவணநிய மம்—ஆகலுமுரித்தே. ஆ-ச.

தெருவின்பெயர்:—ஆவணம்வீதி - ஞௌ்ளன்மறுகு, கோசநிய மம் - மார்க்கந்தெருவே, சிறகெனவொருவழிச் — செப்பவும் படுமே. ஆ-அ.

நெடுந்தெருவின்பெயர்:—மன்றமார்க்கம் - நியமநெடுந்தெருவே. ஆ-ரு.

குறுந்தெருவின்பெயர்:—குறுந்தெருமறுகே. ஆ-க.

குதிரைவையாளிவீதியின்பெயர்:—செண்டுவெளிவை-யாளிவீதி புரவிவட்டந்திரு—முற்றமுமாகும். ஆ-ச.

வேந்தர்வீதியின்பெயர்:—பூரியம்வேந்தர்-வீதியாகும். ஆ-க.

முடுக்குத்தெருவின்பெயர்:— கோணமுடுக்குத்,தெருவாகும்மே. ஆ-க.

முச்சந்தியின்பெயர்—அந்திமுச்சந்தி. ஆ-க.

சந்தியின்பெயர்:—அந்திகவலை—வரியேசந்தி. ஆ-ரு.

நாற்சந்தியின்பெயர்:—முந்தையோர்சதுக்கம் - நாற்சந்தியென்ப. ஆ-க.

சிரேணியின்பெயர்:—சேடியும்வாடையும் - சிரேணியாகும். ஆவி டமெனவும்-அறையப்படுமே. ஆ-க.

அக்கசாலையர்வீதியின்பெயர்:—ஆவேசனமக்க-சாலையர்வீதி. ஆ-க.

வெடர்வீதியின்பெயர்:—பக்கணம்வேடர்-வீதியாகும். ஆ-க.

கோயிலின்பெயர்:—சினகரஞ்சேதிமம் - தேவாலயம், நிலயம் பாழி-பள்ளிநிகேதனம், மந்திரமாலனம் - தேவகுலங்கோட்டம், நகர் தளிவானவ-ருறைபுள்கோயில். ஆ-கச.

அறச்சாலையின்பெயர்:—சத்திரஞ்சாலை-அறச்சாலையாகும். ஆ-உ.

ஓதும்பள்ளியின்பெயர்:—அறப்புறமோதும்-பள்ளியாகும்-ஆ-க.

ஓமமண்டபத்தின்பெயர்:—சமித்தமோம - மண்டபஞ்சாரும். ஆ-க.

மன்னரில்லின்பெயர்:—சாலைமாளிகை - பவனங்கோயில், குலமு மன்னர் - இல்லாகக்கூறுவர். ஆ-ரு.

மன்னன்றேவியிருக்கையின்பெயர்:—கந்தவாசமும் - உவ்வளகமு மந்தப், புரமுந்தேவியர்-மனையாகுமென்ப. ஆ-ரு.

வீட்டின்பெயர்:—மாடமனையுறையுள்-புக்கில்பதிவசதி, இடமே பாந்தி - அகம்வயினில்லம். இடவகைசேர்வு - வீடென்றிசைப்பர். ஆ-கரு.

சிற்றிலின்பெயர்:—கூரைகுரம்பை-குடில்சிற்றிலாகும். ஆ-ரு.

பண்டசாலையின்பெயர்:—புணைவகனிருக்கை-பண்டசாலை. ஆ-க.

வீட்டிறப்பின்பெயர்:—வளவியிறையே-வீட்டிறப்பாகும். ஆ-உ.

தாழ்வாரத்தின்பெயர்:—சோபனந்தாழ்வாரம்-ஆகுமென்ப. ஆ-க.

முகட்டின்பெயர்:—விடங்கமுகடே. ஆ-க.

வேயுளின்பெயர்:—வேயுள்வெய்தல். ஆ-க.

பல்கணியின்பெயர்:—சாலகஞ்சாளரம்-நூழைசாலேகம், வாதாயனம்பல் - கணியெனப்படுமே. ஆ-ரு.

மடைப்பள்ளியின்பெயர்:— அட்டிலடுக்களை - மடைப்பள்ளியாகும். ஆ-உ.

கல்வியூரி—அன்றிக் கல்விபயிலிடத்தின்பெயர்:—கல்வியூரி - கல்லூரியாகும். ஆ-க.

சுவர்த்தலத்தின்பெயர்:—பித்திகைசுவர்த்தலம். ஆ-க.

பீடத்தின்பெயர்:—பீடிகைபீடம். ஆ-க.

சலதாரையின்பெயர்:— அங்கணந்தூம்புவாய்-சலதாரையாகும். ஆ-உ.

முற்றத்தின்பெயர்:—முன்றிலங்கணம்-முற்றமாகும். ஆ-உ.

நிலாமுற்றத்தின்பெயர்:—அரமியநிலாமுற்றம்-ஆகுமென்ப. ஆ-க.

திண்ணையின்பெயர்:—திட்டைமண்ணீடு-தெற்றிவேதிகை-திண்ணையாகும்-என்மனார்புலவர். ஆ-ச.

கற்படுத்தபூமியின்பெயர்:—கற்படுத்தபூமி-குட்டிமமாகும். ஆ-க.

சித்திரகூடத்தின்பெயர்:—தெற்றியம்பலம்-சித்திரகூடம். ஆ-உ.

அம்பலத்தின்பெயர்:—பொதியிலுமன்றமும் - பொதுவுமம்பலம். ஆ-ரு.

கழகமெனும்பெயர்: — செல்லறியக்கும் - பல்புகழ்ச்சேந்தனில், வல்லுனர்நாவலர்-வாய்ந்தவிடமும், மல்லுஞ்சூதும் - படையுமற்றும், கல்விபயில்களமும்-கழகமாகும். ஆ-அ.

அரசிருக்கையின்பெயர்:— அரசிருக்கைப்பெயர் - அத்தாணி வேந்தவை. ஆ-உ.

அரங்கமெனும்பெயர்:—போரினிடமும் - வட்டாடிடமும், ஆட விடமும் - அவையுமரங்கம். ஆ-ரு.

ஒருசிறை—அல்லது — ஒதுக்கிடத்தின்பெயர்:—ஒருசிறைதுச்சில். ஆ-க.

ஏகாந்தத்தின்பெயர்:—ஒருவந்தமேகாந்தம்-கொட்டில்வேறிடம். ஆ-ரு.

கற்படையின்பெயர்:—சுருங்கைகற்படை — ஆகுமென்ப,ஆ-க.

உறைவிடத்தின்பேயர்:—ஆகரம்பிறப்பிடம் - உறைவிடமாகும். ஆ-உ.

அடுப்பின்பெயர்:—குமுதஞ்சுல்லி-காமரமடுப்பு. உத்தானமென வும் - ஓதப்படுமே ஆ-௪.

கூட்டின்பெயர்:—குடம்பைபஞ்சாம்-கட்சிகூடாகும். ஆ-ரு.

பண்ணுங்கூட்டின்பெயர்: — குலாயனம்பஞ்சரம் - பண்ணுங் கூடே. ஆ-உ.

குதிரைப்பந்தியின்பெயர்:—மந்திரஞ்சாலை—குதிரைப்பந்தி,ஆ-உ.

யானைசேர்விடத்தின்பெயர்:— ஆலயமும்வாரியும் - சேவகமுந் தண்டமும், கூடமுமோளியும் - யானைசேர்விடம். ஆ-சு.

யானைசெல்வழியின்பெயர்:—தண்டம்யானை - செல்வழியென்ப. ஆ-க.

யானைதுயிலிடத்தின்பெயர்: — சேவகம்யானைத்துயிலிடமாகும். ஆ-க.

மக்கட்கிடப்பிடத்தின்பெயர்:—கட்டியமளி - சேக்கையுறையுள், சட்டகஞ்சேர்விடம் - பள்ளிசயனம், பட்டம்பாழி - பாயலரிதுயிலி டம், ஒட்டியவுயர்திணைக் - கிடப்பிடமாகும். ஆ-கரு.

விலங்குதுயிலிடத்தின்பெயர்:—பட்டம்போத்து — பண்ணைசே க்கை, விலங்குதுயிலும் - இடமாகும்மே. ஆ-௪.

வேள்விக்குண்டத்தின்பெயர்:—வேதியநிமித்தமும் - வேள்விக் குண்டம். ஆ-உ.

முனிவர்வாசத்தின்பெயர்:—தாபதம்பாழி - கண்டைபள்ளி, முனி வர்வர்சமென - மொழியப்படுமே. ஆ-௪.

மட்கலஞ்சுடுமிடத்தின்பெயர்:—சுள்ளையுஞ்சூளையும் - மட்கலஞ் சுடுமிடம். ஆ-௨.

சுடுகாட்டின்பெயர்:—சுடுகாடீமம் - மயானஞ்சுடலை, சுடுநிலம் புறங்கா - டிடுகாடுமுதுகாடு, வனமெரிவனம்பிதிர் - வனம்பிணக்கா டே. ஆ-௧௧.

போருகளத்தின்பெயர்:— களரிபறந்தலை - செம்புலம்படுகளம், பொருகளமென்ன - புகன்றனர்புலவர். ஆ-௪.

வழக்குநிலத்தின்பெயர்:— அருப்பமாரிடம் - அளரிழுக்குவழுக் குநிலம். ஆ-௪.

தொழுவத்தின்பெயர்:—தொழுவமாவேலி - தோழுமாணிலையே. ஆ-௩.

மதிலின்பெயர்:—இஞ்சிநொச்சி - எயில்சுற்றுப்புரிசை, பந்தம் வரைப்புக் - காப்பரண்காவல், ஆரலோதை - பிராகாரம்வேலி, சிர்சா லம்வேணகை - மதிலெனச்செப்புவர். வன்சிறையுவளகம் - ஆரை யும்வரையார். ஆ-௧௩.

மதிலுளுயர்மேடையின்பெயர்:—பரிகமகப்பா - பதணமூன்றும், உரியமதிலுள் - உயர்மேடைக்கே. ஆ-௩.

மதிற்சுற்றின்பெயர்:—தொடையுந்தகைப்பும் - வாரியுஞ்சுற்றே. ஆ-௩.

மதிலுறுப்பின்பெயர்:— பதப்பாடெந்திரம் - கோசந்தோணி, விதப்புஞாயில் - நாஞ்சின்மதிலுறுப்பே. ஆ-எ.

அகழின்பெயர்: — அகழிகிடங்கோடை - பரிகையகழ்கேணி' ஆ-௬.

குதிரின்பெயர்:—புகல்குதிராகும். ஆ-௧.

வாயிலின்பெயர்:—தோட்டிதுவாரம் - வாரிகடைவாயில். ஆ-௪.

கோபுரம்அல்லதுகோபுரநிலையின்பெயர்:—சிகரிகோபுரம். ஆ—௧.

பெருவாயலின்பெயர்:—கோபுரமென்பது - பெருவாயிலாகும், ஆ-௧.

கோபுரவாயிலிற்புகு புழையின்பெயர்: — புதவுவாயில் - புகுபெ ரும்புழையே. ஆ-௧.

கோபுரவாயிற்றிண்ணையின்பெயர்:—அளிந்தமவ்வழி - சார்திண் ணையாகும். ஆ-௧.

கோபுரவாயிற்படிச்சுருளின்பெயர்:—அத்தினகம்வாயில் - படிச்சருளாகும். ஆ-க.

வயலின்பெயர்;—விளைபுலனும்பண்ணையும்-செய்யுங்கழனியும், தடியும்பாத்தியும்-செறுவும்வயலே. ஆ-எ.

சிறுவயலின்பெயர்:—குண்டில்பாத்தி-சிறுவயலாகும். ஆ-உ.

புனத்தின்பெயர்:— குறிஞ்சிநிலச்சார்பும் - கொல்லையும்புனமே. ஆ-உ.

தினைப்புனத்தின்பெயர்: —ஏனலும் வளாகமும் - தினைப்புனமென்ப. ஆ-உ.

பழங்கொல்லையின்பெயர்:—முதைப்புனம்பழங்கொல்லை. ஆ-க.

புதுக்கொல்லையின்பெயர்:— இதைப்புனம்புதுக்கொல்லை. ஆ-க.

தோட்டத்தின்பெயர்:—தோட்டந்துடவை - படப்பை யிம்மூன்றும், தோட்டப்பெயரெனச்-சொல்லினர்புலவர். ஆ-௩.

உழவின்பெயர்:—துடவைதொய்யில்—உழவின்பெயரே. ஆ-உ.

உழுதொழில் வளைப்பின்பெயர்:–தொடுப்பேயுழுவோர்-தொழில்வளைப்பாகும். ஆ-க.

புதுவரம்பின்பெயர்:—மரிசிபுதுவரம்பு. ஆ-க.

புற்றின்பெயர்:—வன்மீகம்புற்று. ஆ-க.

வரம்பருகின்பெயர்:—கங்குவரம்பருகே. ஆ-க.

பள்ளத்தின்பெயர்: — உவளகம்பயம்பே - அவல்குழிதாழ்வே, இழிவுகிழக்கு-படுகர்பள்ளம். ஆ-அ.

புற்றஞ்சோற்றின்பெயர்:—குரும்பிபுற்றஞ்சோறே. ஆ-க.

முதுநிலத்தின்பெயர்:—களரிகரம்பே - பெரும்பாழ் முதுநிலம். ஆ-௨.

வழியின்பெயர்:—சரிநெறியொழுக்கம் - தாரையாறு, வதியதர்மார்க்கம் - இயவைநடவை, பதவைசெப்பம் - அயனமிடவை, வாரிவட்டை - வரிவயவைவகுந்து, செலவுசிறுபதம் - வழிக்கிளவியாகும்,

அறுநெறியின்பெயர்:— அத்தங்கடங்கடறு - சுரம்புசுரமருநெறி. ஆ-௫.

கவர்நெறியின்பெயர்:—கவலைகவர்நெறி-ஆகக்கருதுவர். ஆ-க.

சிறுவழியின்பெயர்:—விடங்கர்சிறுவழி-ஆகுமென்ப. ஆ-க.

பெருவழியின்பெயர்:—பாதைபெருவழி. ஆ-க.

இழிந்தேறப்படுவழியின்பெயர்;–படுகர்மடுவிழிந்—தேறப்படுநெறி. ஆ-உ.

கற்படியின்பெயர்:—ஆரோகணஞ்சோ-பானங்கற்படி. ஆ-உ.

நீள்வழியின்பெயர்:—அளக்கர்நீள்வழியே. ஆ-க.

இடத்தின்பெயர்:—வாய்புலம்பாங்கர் - வயின்களம்வைப்பு, தேயம்வழியுழி-இணையேமருங்கு, பானிலந்தலமே-வளாகம்பட்டி, சூழருனம்-இடப்பெயர்த்தொடர்பே, ஆ-கஅ.

இடப்பொதுப்பெயர்:—கண்கால்புரமகம் - உள்ளுழைகீழ்மேல், பின்சாரயல்புடை - * தேவகையெனுஅ, முன்னிடைகடைதலை - வலமிடமேனுஅ, அன்னபிறவும்-அதன்பாலவென்மனார். ஆ-கக.

பக்கத்தின்பெயர்:—மாடுசிறையுழி - மருங்குஞாங்கர்முன், பால்புடைபாங்கர் - பக்கமாகும். ஆ-சு.

நடுவின்பெயர்:—நனந்தலைநாப்பண் - மத்திமகள்ளு, வயங்கிடையொத்தல் - நாவோடணவு, நலந்திகழ்கூழையும் - நடுவெனலுகும். ஆ-சு.

உயர்ச்சியின்பெயர்:—உம்பர்மீமிசை-உகப்புச்சமோங்கல், துங்கமுவணம்-மேடுமோடு, தூக்குமேக்குறை-உன்னதமெழுமை, நிவப்பிவையுயர்ச்சி - ஆகநிகழ்த்துவர். ஞாங்கர்முன்னும் - மேலுமாகும். ஆ-கக.

முன்னரின்பெயர்:—முதலுந்தலைத்தாளும்-முன்னராகும். ஆ-உ.

இம்பரெனும்பெயர்:—இம்பரிவணே. ஆ-க.

உம்பரெனும்பெயர்:—உம்பருவணே. ஆ-க.

ஆண்டெனும்பெயர்:—ஆண்டவ்விடம். ஆ-க.

ஈண்டெனும்பெயர்:—ஈண்டிவ்விடம். ஆ-க.

கூப்பிடுதூரத்தின்பெயர்:-எல்லைகுரோசம்—கூப்பிடுதூரம். ஆ-உ.

கோழிபறவை யளவின்பெயர்:—கிறவுஞ்சங்கோழி- பறவையளவாகும், ஆ-க.

யோசனைதூரத்தின்பெயர்:—புகையோசனையாம். ஆ-க.

காதத்தின்பெயர்:—காவதங்காதம்—ஆகக்கருதுவர். ஆ-க.

ஒருவற் கொருவன் ஆகி யுதவியும்
பரிசின் மாக்கள் பற்பல ராயினும்
தானொரு வன்னே தரணி மானவன்
செந்தமிழ்ச் சேந்தன் தெரிந்த திவாகரத்

தைந்தாவது

## இடப்பெயர்த்தொகுதி

முற்றிற்று.

---

* தேவகை-என்பது திசைக்கூறு. ஊக்கம்என்பதூஉம் பாடம்.

கடவுள் துணை.

# ஆறாவது பல்பொருட்பெயர்த்தொகுதி.

## மூலபாடம்.

பொன்னின்பெயர்:—ஆடகமாசை - ஈழமேமம், மாடுவாணம்-கனகந்தமநியம், வெருக்கைசொன்னம் - பொருளோடரியே, ஈகை நிதியே - கருந்தனங்காஞ்சனம், பீதகமாடை - தொடுக்கமருத்தம், சாமிகரம்பூரி-சந்திரமாழை, நிதானந்தேசிகம் - செந்தாது விருத்தம், திரவியம்வேங்கை-சாம்பூனதமுரை, சாதரூபம் - உடல்பண்டமிரணியம், பொலமென்றின்னவை-பொன்னெனப்படுமே. ஆூ-௩௭.

ஐவகையுலோகமாவன:—பொன்னும்வெள்ளியும்-செம்பு மிரும்பும், அன்னவீயமும்-ஐவகையுலோகம். ஆூ-௧.

எழுவகையுலோகமாவன:—தாரவொடுகஞ்சம் - தானுங்கூட்டி, எழுவகையுலோகம்-என்னவும்படுமே. ஆூ-௧.

நவமணி கடவுண்மணியின்பெயர்:—நவமணிகடவுள்-மணியென்றிவற்றின், நிகழ்பெயர்நிதியும்-நிதானமுமென்ப. ஆூ-௨.

பொற்காசின்பெயர்:—காணம்பொற்காசே ஆூ-௧.

மணிப்பொதுப்பெயர்:—மனவுங்காசும்-மணியின்பொதுப்பெயர். ஆூ—௨.

அகன்மணிப்பொதுப்பெயர்:—அரதனஞ்சலாகை - அகன்மணிக்காகும். ஆூ-௨.

மாணிக்கத்தின்பெயர்:—மாமணிபதுமராகமாணிக்கம். ஆூ—௩.

முத்தின்பெயர்:—நித்திலந்தாளம்-ஆரமுத்தே. ஆூ-௩.

தரளமெனும்பெயர்:—தாளந்கிரட்சி-யாவுஞ்சாற்றுவர். ஆூ-௧.

பவளத்தின்பெயர்:—வித்துருமந்துகிர்-துப்போடரத்தம், ஒத்தபிரவாளம்-துவரிவைபவளம். ஆூ-௬.

மரகதத்தின்பெயா:—அரியொடுபச்சை-மரகதமாகும். ஆூ-௩.

வச்சிரமணியின்பெயர்:—வச்சிரம்வயிரம். ஆூ-௧.

வைடூரியத்தின்பெயர்:—வாலவாயம்—வைடூரியமே. ஆூ-௧.

நீலமணியின்பெயர்:—மணிநீலமணியே. ஆூ-௧.

சங்கநிதி யெனும்பெயர்:—செங்கைநிதியம்பற்-சேர்தன்செங்கையில், சங்கின்வடிவினது-சங்கநிதியே. ஆூ-௪.

பதுமநிதியெனும்பெயர்:—தேமலாலங்கல்-சேந்தன்செங்கையில், தாமரைவடிவினது-பதுமநிதியே. ஆ-ச.

நிதியாவன:—பதினான்குவகையும்-நிதியமென்ப. *

பண்டாரத்தின்பெயர்:—கோசந்தண்டம்-பண்டாரமாகும். ஆ-உ.

வெள்ளியின்பெயர்:—இரசதந்தாரம்-களதௌதம்வெள்ளி. ஆ-ரு.

வெண்கலத்தின்பெயர்:—கஞ்சம்வெண்கலம் - ஆகக்கருதுவர். ஆ-க.

பித்தளையின்பெயர்:—மாயாபுரியார—கூடம்பித்தளை. ஆ-உ.

செம்பின்பெயர்:—சீருணந்தாம்பிரம்-சுற்பஞ்செம்பே. ஆ-ரு.

இரும்பின்பெயர்:—கருந்தாதுமயமும் - இரும்பெனக்கருதுவர். ஆ-உ.

எஃகின்பெயர்:—சத்தியெஃகே. ஆ-க.

ஈயத்தின்பெயர்:—வங்கமுஞ்சீருளும்-ஈயமாகும். ஆ-உ.

காரீயத்தின்பெயர்:—நாகங்காரீயம்—ஆகக்கருதுவர். ஆ-க.

தராவின்பெயர்:—மதுகந்தாரவென-வைக்கப்படுமே. ஆ-க.

இரும்புள்வாங்கு காந்தமணியின்பெயர்:—வலித்திரும்புள்ளே — வாங்குங்காந்தம், சொல்லத்தகுஞ்சலாகை-சும்பகமென்ப. ஆ-உ.

சந்திரனொளியிற் றண்ணீர்காலு மணியின்பெயர்:—சந்திரனொளியில்-தண்ணீர்கான்மணி, சந்திரகாந்தம்-எனப்பெயர்சாரும். ஆ-க.

சூரியனொளியிற் றீங்காலுமணியின்பெயர்:—சூரியனொளியில்-தீக்கால்சலாகை, சூரியகாந்தம்-எனப்பெயர்சொல்லும். ஆ-க.

பளிங்கின்பெயர்:—படிகம்பளிங்கு-பருக்கையாகும். ஆ-உ.

சங்குமணியின்பெயர்:—அக்குச்சங்கு-மணியாகுமென்ப. ஆ-க.

பலகறையின்பெயர்:—வராடிசோகி - பலகறையென்ப, வெள்வரியலகென—விளம்பவும்படுமே. ஆ-ச.

பலபண்டத்தின்பெயர்:—பண்ணியங்கூலம் - வளமேபண்டாரம், பண்ணிகாரம்-பலபண்டப்பெயரே. ஆ-ரு.

அரும்பண்டத்தின்பெயர்:—அரும்பண்டப்பெயர் — தாரமென்றாகும். ஆ-க.

கருப்பூரத்தின்பெயர்:—கருப்பூரம்பாளிதம். ஆ-க.

கத்தூரியின்பெயர்:—கத்தூரிமான்மதம். ஆ—க.

---

பதினான்குவகையான-உலோகமைந்து மணியொன்பதுமாம்.

நால்வகைச்சாந்தாவன:—பிதங்கலவை - வட்டிகைபுலியென, நால்வகைச்சாந்தின்-நாமமாகும். ஆ-௪.

சாந்தின்பொதுப்பெயர்:—கலவைச்சேறும் - காலேகவண்ணமும், விரையுங்களபமும்-சாந்தின்பொதுப்பெயர். ஆ-௪.

செஞ்சாந்தின்பெயர்:—குங்குமஞ்செஞ்சாந்து. ஆ-௧.

பூசுவனவற்றின்பெயர்:—அங்கராகம்பூசுவன. ஆ-௧.

மயிர்ச்சாந்தின்பெயர்:—தகரமேலம் - காசறைமயிர்ச்சாந்தே. ஆ-௩.

செறிகுழம்பு அல்லது சந்தனக்குழம்பின்பெயர்:— தேய்வையுஞ் செச்சையும்-செறிகுழம்பாகும். ஆ-௨.

அப்புதலின்பெயர்:—கொட்டலுஞ்சாத்தலும்-அப்புதலாகும்.

பூசுதலின்பெயர்:—புலர்த்தலும்வரித்தலும்-பூசலாகும். ஆ-௨.

மகளிராகத்தெழுதுகோலத்தின்பெயர்:—எழுதுகோலால் - மகளிராகத்து, தொழில்பெறவரிப்பது-தொய்யிலாகும். ஆ-௧.

திலகத்தின்பெயர்:—சுடிகையுந்திலதமும்-சுட்டியுந்திலகம். ஆ-௩.

நுதற்புனைகுறியின்பெயர்:— புண்டரந்திலகம்-நுதற்புனைகுறியே. ஆ-௨.

சிந்தூரத்தின்பெயர்:—சேலேகஞ்சிந்தூரம். ஆ-௧.

சாதிலிங்கத்தின்பெயர்:—இங்குலிகஞ்சாதிலிங்கம். ஆ-௧.

குங்கிலியத்தின்பெயர்:—குங்குலுவுங்குக்குலுவும் - குங்கிலியமாகும். ஆ-௨.

பெருங்காயத்தின்பெயர்:— இங்குபெருங்காயம் - என்றிசைத்தனரே. ஆ-௧.

அரக்கின்பெயர்:—அரத்தமுருந்துப்பும்—அரக்கின்பெயரே. ஆ-௨.

சுக்கின்பெயர்:—சுண்டிசுக்கு. ஆ-௧.

ஏலத்தின்பெயர்:—துடியேயேலம். ஆ-௧.

அதிமதுரத்தின்பெயர்:—அதிங்கமட்டி—அதிமதுரமாகும். ஆ-௨.

சாமரையின்பெயர்:—சாமரைகவரி—சகரிசீகரம். ஆ-௩.

அச்சுதமென்னும்பெயர்:— அறுகுவெள்ளரிசி-கூட்டியதச்சுதம். ஆ-௨.

பிரப்பென்னும்பெயர்:—கொள்கலமொன்றில்-குறுணியாக, பல்லுணவுபெய்து-பாரிப்பதுபிரப்பே. ஆ-௨.

விறகின்பெயர்:—இந்தனங்காட்டம்-முருடிவைவிறகே. ஆடூ-ங.

ஓமவிறகின்பெயர்:—சமிதையோம-விறகெனச்சாற்றுவர். ஆடூ-க.

நெருப்புறுவிறகின்பெயர்:—ஞெகிழிகொள்ளி - நெருப்புறுவிறகாம். ஆடூ-உ.

கடைக்கொள்ளியின்பெயர்:—முளரியலாதம் - முற்கங்கடைக்கொள்ளி. ஆடூ-ங.

கரியின்பெயர்:—கந்துளுமிருந்தையும்-கரியெனக்கூறுவர். ஆடூ-உ.

சாம்பரின்பெயர்:—அடலைவெண்பலி-சாம்பராகும். ஆடூ-உ.

திருநீற்றின்பெயர்:—காப்பும்பொடியும்-பற்பமும்விபூதியும், திருநீறதனை செப்புங்கிளவி. ஆடூ-ச.

சாணியின்பெயர்:—சாணிபுண்ணிய-சாந்தமெனப்படும். ஆடூ-க.

சுடுசுண்ணச்சாத்தின்பெயர்:—சுதையுங்களபமும் - சுடுசுண்ணச்சாந்தே. ஆடூ-உ.

புகையின்பெயர்:—தூமமுமரியும்-தூபமும்புகயே. ஆடூ-ங.

மணப்புகையின்பெயர்:—குருஉப்புகைநறைபடு - கொழும்புகையாகும். ஆடூ-க.

பனிநீரின்பெயர்:—இமசலஞ்சீதநீர்-பனிநீர்க்கெய்தும். ஆடூ-உ.

பொடியின்பெயர்:—பிதிர்சிதர்பராகம்-தகர்சின்னபின்னம், துகளுநீறும் - சுண்ணமுந்தாதும், பொடியின்பெயரே - புழுதியுமாகும். ஆடூ-கO.

காவிக்கல்லின்பெயர்:—காவிக்கல்செங்கல்-காரிகந்தாது. ஆடூ-ங.

கழிப்புறுகுறுமலத்தின்பெயர்:—கழிப்புறுகுறுமலம் – காட்டமெனப்படும். ஆடூ-க.

இலவின்பஞ்சின்பெயர்:—இலவின்பஞ்சின்பெயர் - பூளையாகும் ஆடூ-க.

பருத்திப்பஞ்சின்பெயர்:—கார்ப்பாசம்பரி–பன்னல்பருத்தி. ஆடூ-ங.

பஞ்சினுனியின்பெயர்:—தய்யேபஞ்சில் - தொடர்நுனியாகும் ஆடூ-க.

சோற்றின்பெயர்:—புன்கமிதவை - பொம்மல்போனகம், அன்னமோதனம் - அயினியடியில், பாளிகம்பொருகு - மிசைபதம்பாத்து அமலையுணவு-துப்பசனங்கவளம், சொன்றிநிமிரம்-மடைகூழ்புழுக்கல் ஒன்றியமூரல்-சோறெனவுரைப்பர். ஆடூ-உச.

